Kmm02 75

ஓம்

திருச்சிற்றம்பலம்

# செந்தமிழ்ச் செல்வி

திருநெல்வேலித் தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினின்றுந்

திங்கள்தோறும் வெளிவருவது.

சிலம்பு ய } மெய்கண்டான் யாண்டு-எாகூ பங்குனித் திங்கள் 1932ஆ மார்ச்சுமூ—ஏப்ரல்மூ { பரல் ௩

திருச்சிற்றம்பலம்.

## திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரம்

அருந்துணையை யடியார்தம் மல்லல்தீர்க்கும்
அருமருந்தை யகன்ஞாலத் தகத்துட் டோன்றி
வருந்துணையுஞ் சுற்றமும் பற்றும் விட்டு
வான்புலன்க ளகத்தடக்கி மடவா ரோடும்
பொருந்தணைமேல் வரும்பயனைப் போக மாற்றிப்
போதுநீக்கித் தனைநினைய வல்லோர்க் கென்றும்
பெருந்துணையைப் பெரும்பற்றப் புலியூ ரானைப்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே.

பதவுரை:—

அருந்துணையை=(அடியாரல்லாதார்க்குத்) துணையல்லாதவனு யிருப்பவனும்

அடியார் தம் அல்லல் தீர்க்கும் அருமருந்தை=அடியார்களுடைய துன்பங்களாகிய பிறவிநோயை நீக்குதற்கு பெறுதற்கு அரிய மருந்து போன்றிருப்பவனும்

அகல் ஞாலத்து அகத்துள்=பரந்த நில உலகத்தினிடத்து

தோன்றிவரும் துணையும் சுற்றமும் பற்றும் விட்டு=உண்டாகி யிருக்கின்ற மனைவி மக்கள் உடன்பிறந்தார் முதலிய உறவினர்கள் பற்றும் ஏனைய உறவினர்கள் பற்றும் உலகப் பொருட்பற்றும் நீங்கி

வான்புலன்கள் அகத்து அடக்கி=வலியுள்ள ஐம்புலன்களையும் வெளியே விடயங்களிற் செல்லவொட்டாது தடுத்து

மடவாரோடும் பொருந்து அணைமேல்வரும் பயனைப் போக மாற்றி=பெண்களோடும் சேர்கின்ற படுக்கைமே லிருந்து நுகரும் சிற்றின்ப நுகர்ச்சியைத் (தமது உள்ளத்தை) விட்டுப் போகும்படி ஒழித்து

பொது நீக்கி=(சிவபெருமானை அவன்) உலகில் விளங்கும் பொது இயலில் வைத்து வழிபடுதலை நீக்கி

தனை நினைய வல்லோர்க்கு=அவனது உண்மை நிலையில் வைத்து நினைத்துச் சிறப்பாக வழிபடும் ஆற்றலுடையவர்களுக்கு

பெருந்துணையை—ஒப்பற்றதோர் பெரிய துணையாயிருப்பவனும்

பெரும்பற்றப் புலியூரானை=திருப் பெரும்பற்றப் புலியூரில் எழுந்தருளியிருப்பவனும் ஆகிய சிவபெருமானைப்பற்றி

பேசாத நாளெல்லாம்=எந்த நாட்களில் நாம் (அடியார்கள்) பேசவில்லையோ அந்த நாட்களெல்லாம்

பிறவாநாளே=(தோன்றின நாட்களாயிருந்தாலும்) தோன்றாது வீணே பயனின்றிக் கழிந்த நாட்களேயாகும்.

விளக்க உரை:—

அருந்துணை=அருமையாகிய துணை. அருமை இங்கே இன்மைப் பொருளை உணர்த்துகின்றது. சிவபெருமான் அவனை நினையாத மக்களுடைய உள்ளத்தில் வேறறக் கலந்திருந்து துணையாயிருந்தாலும் அவர்கள் அதனை யறியாது அவனைத் துணையாகக் கொள்ளா திருத்தல்பற்றி அவர்களுக்கு அவன் அருந்துணையாய் (அதாவது துணையல்லாதவனாய்) இருக்கின்றான். அடியார்க்கு அல்லல் தீர்க்கும் அருமருந்தை என்று பின்னே கூறப்பட்டதனால் அடியாரல்லாதார்க்கு அருந்துணை என்று பொருளுரைக்கப்பட்டது.

அடியார் அல்லல் தீர்க்கும் அருமருந்தை=உயிர்ப்பற்று பொருட் பற்றுக்களை விட்டுச் சிவபிரான் திருவடியிலேயே அன்பு வைத்து

ஒழுகுகிறவரே அடியாராவார்—'அடியார்பவரே யடியவராமால்' எனத் திருமூலர் திருமந்திரத்திற் கூறியருளினர் (2741). அல்லல் என்பது இங்கே பிறவித்துன்பம். அடியார் பிறவித் துன்பத்தைச் சிவபிரான் திரோதமல மூலமாயன்றி நேரே தனது அருளினால் நீக்குதலால் சிவபிரான் மருந்து எனக்கூறப்பட்டார். அடியாரல்லார்க்கு அத்தகைய அருளாகிய மருந்து கிடைக்கப்பெறாததனாலும் சிவபிரான் அருளன்றி வேறொன்றும் பிறவித்துன்பத்தை நீக்காது ஆதலானும் அருமருந்து எனப்பட்டது. கிடைத்தற்கரிய பொருளை அருமந்த (அருமருந்தன்ன) பொருள் என்று உலக வழக்கிற் கூறப்படுகின்றது.

அகன் ஞாலத்தகத்துள் தோன்றிவரும் துணையுஞ் சுற்றமும் பற்றும் விட்டு=துணை, சுற்றம் என்பன உயிர்ப்பற்றையும், பற்று என்பது உலகப் பொருட்பற்றையும் குறிக்கின்றன. ஒருவன் உயிர்ப்பற்று பொருட்பற்றுக்களை விட்டாலன்றி அவனுக்கு ஆணவமலம் நீங்கி அருள் நேராய் கிடைக்கப்பெறாது ஆதலின் அவ்வாறு இருவகைப் பற்றுக்களும் கூறப்பட்டன. மனைவி மக்கள் உடன்பிறந்தார்கள் ஒரே மனையில் கூட இருப்பவர்கள் ஆதலின் அவர்கள் துணைகள் என்றும் வீட்டிலன்றி வெளியே சுற்றிக்கொண்டிருக்கும் உறவினர்கள் ஆதலின் சுற்றம் என்றும் கூறப்பட்டன.

மடவாரோடும் பொருந்தணைமேல் வரும் பயனைப்போக மாற்றி= 'கண்டு கேட்டுண்டுயிர்த்து உற்றறியும் ஐம்புலனும் ஒண்டொடிக் கண்ணேயுள' என்று திருவள்ளுவ நாயனார் கூறியபடி பெண்ணினைச் சேர்ந்து உண்டாம் சிற்றின்ப நுகர்ச்சியே பொதுவாகப் பொருட்பற்றாயும் சிறப்பாக உயிர்ப்பற்றாயு மிருத்தலாலும் மக்களால் நீக்குதற்கு வலியது ஆதலாலும் மனையுஞ் சுற்றமும் பற்றும் விட்டு என்பதன் பின்னும் வான்புலன்களகத்தடக்கி என்பதனுக்குப் பின்னும் அது கூறப்பட்டது. இங்கே கூறப்பட்ட சிற்றின்பம் நெறிகொள் சிற்றின்பம். பிறர் மனைவியரை அல்லது வேசையரைச் சேரும் இன்பம் அன்று. திருஞானசம்பந்த சுவாமிகள் இக்கருத்தை 'நெறிகொள் சிற்றின்பந்-துப்பனென்னாதருளே துணையாக-ஒப்பரொப்பர்' என்று திருச்சோற்றுத்துறைத் தேவாரத்திற் கூறியருளினார்.

பொது நீக்கி=பொது என்பது சிவபெருமான் உலகில் விளங்கும் பொது இயல். God as manifested in the world. This manifested form is limited and is not His true State.

பெருந்துணை—சிவபிரான் தனக்கு மிக்காரும் ஒப்பாருமில்லாதவனும் எல்லாரினும் பெரியனும் தன்னை அடைந்த அடியார்களுக்குப் பேரின்பம் கொடுத்தலின் பெருந்துணை எனக்கூறப்பட்டான். மனைவி மக்கள் முதலிய உறவினர்களும் சுற்றத்தார்களும் உலக இன்ப நுகர்தற்கு உதவியாயுள்ள சிறு துணைகள். சிவபெருமான் பேரின்பம் உதவுகின்ற பெருந்துணையாவார்.

பிறவாநாள்—பிறந்தும் ஒருவனுக்குப் பயன்படாத நாளாதலின் பிறவா நாள் எனப்பட்டது. நாள் சாதி யொருமை. சுந்தரமூர்த்தி சுவாமிகள் 'இட்டனு மடியேத்துவா ரிகழ்ந்திட்ட நாள் மறந்திட்ட நாள் கெட்ட நாள் ......' என்று கூறியதை நோக்குக.

இந்தப் பாட்டு சிவபிரான் எல்லா உயிர்களோடும் வேறறக்கலந்து அவர்களுக்குத் துணையாயிருந்தாலும் அறநெறியில் ஒழுகாதவர்கள் அவன் துணையைப் பயன்படுத்திக் கொள்ளாமல் துன்பத்தையும் அறநெறியிலொழுகி அவனை ஏத்துகிறவர்கள் அவன் துணையைப் பயன்படுத்தி உலக இன்பமாகிய சிற்றின்பத்தையும் புண்ணிய பாவமிரண்டுங் கடந்த வீட்டு நெறியில் ஒழுகி அவனை ஏத்துகிறவர்கள் அவன் துணையைப் பயன்படுத்திப் பேரின்பத்தையும் அடைகின்றார்கள் என்ற உண்மையைக் கூறுகின்றது. திருஞான சம்பந்த சுவாமிகளும் திருவெண்ணியூர்த் தேவாரப் பதிகத்தில்,

"முத்தானை மூவுல குக்கோரு மூர்த்தியாய்க்
காத்தானைக் கனிந்தவ ரைக்கலந் தாளாக
ஆர்த்தானை யழகமர் வெண்ணியம் மான்றன்னைப்
ஏத்தாதா ரேன்செய்வார் ஏழையப் பேய்களே"

எனக்கூறி யிருத்தல் காண்க.

மா. வே. நெல்லையப்ப பிள்ளை

---

# வெடிமருந்து

[வித்வான் G. தேவநேசன் அவர்கள்]

வெடிமருந்தாவது வெடிக்கின்ற மருந்து அல்லது சரக்கு. வேட்டு, வெடி என்பன ஒருபொருட் கிளவி. அவை விள் என்னும் மூலத்தினின்றும் வெடிக்கின்ற ஒலிபற்றிப் பிறந்து திரிந்த பழஞ் செந்தமிழ்ச் சொற்கள். வெடிமருந்துகள் பெரும்பாலுங் கலவைகளாயிருக்கும். அக்கலவைகளில் ஒன்று கருமருந்து (Gun powder) என்பது.

இதுபோது போர்க்குண்டுகள் எத்துணையோ புதுமாதிரியாய்ச் செயப்படினும் அவை யெல்லாவற்றுக்கும் மூலம் கருமருந்தே யென்பது எவர்க்குந் தெரிந்திருக்கும். கந்தகம் கரி வெடியுப்பு என்ற மூன்றன் கலவையே கருமருந்தாகும். இம் மூன்றும் இந்து மாநாட்டில் தொன்றுதொட்டுக் கிடைக்கின்றன. கரிய நிறத்தானும் மருந்துபோலுந் தோற்றத்தானும் மருந்துச் சரக்காகிய கந்தகத்தின் சேர்க்கையானும் கருமருந்தெனப்பட்டது.

கருமருந்தின் பிறப்பிடத்தைப்பற்றி Encyclopædia Britannica என்னும் ஆங்கிலக் கலைகராதி பின் வருமாறு கூறுகின்றது:—

(Ninth Edition Vol XI பக். 317)

"கருமருந்தின் கிளைப்பிறப்பு—எல்லா அதிகாரிகளின் ஆராய்ச்சியும் கீழ்நாட்டையே கருமருந்து போன்ற ஒரு வெடி கலவையின் பிறப்பிடமாகச் சுட்டுவதாகத் தெரிகின்றது. அது அங்கு தொன்று தொட்டு வழங்கி வந்தது. ஆனால் அதைக் குண்டாக உபயோகித்த காலம் மிகப்பிந்திய தென்பதற்கு ஏதும் ஐயமின்று. இந்தியசீனப் பெரு மைதானங்களில் ஏராளமாய் மண்ணோடு மண்ணாய்க் கலந்துள்ள வெடியுப்பின் சிறப்பியல்கள் தற்செயலாய்க் கண்டு பிடிக்கப்பட்டதே வெடி மருத்துவக் கலைக்குத் தொடக்கமா யிருந்திருக்கக்கூடும். அடுப்பெரிக்

கும் விறகுக்கரியினால் கருமருந்திற் சேரும் சரக்குகளில் வேக மிக்க இரண்டும் எளிதாய்க் கலப்பாகும். பின்பு நெருப்பின் தொழிலால் அவை விளக்கமாயேனும் மங்கலாயேனும் விரைந் தெரியும். வெடியுப்பு சில வேளைகளில் நிலக்கரியில் விழுந்து விடுவதால் வியக்கத்தக்க விதமாய் அதை மிதமிஞ்சி எரியப் பண்ணுகின்றது. ஆகையால் வெடியுப்பும் கரியும் சேர்ந்த கலவையே யாதானு மொருவேகத்துடன் வெடிக்கு மென்பதை யாம் எளிதாய் உணரக்கூடும். கந்தகம் பிந்திச் சேர்க்கப்பட் டதே. அது வெடிப்பிற்கு வேண்டுவதன்று. நமது தற்காலத் துப்பாக்கி மருந்து அத்தகைய கலவையின் திருத்தமும் நிறைவுமேயன்றி வேறன்று'' (மொழி பெயர்ப்பு)

கருமருந்தானது தென்னாட்டில் வாண வேடிக்கைக்கும் கிணறு வெட்டுக்குமாக இருவகையிற் பயன்பட்டு வருகிறது. வாணம் சிறியோர்க்குரியவும் பெரியோர்க் குரியவுமாக இரு வகைப்படும். அவற்றுட் சிறியோர்க்குரியன வேட்டுகளென் றும் பட்டாசு (பட்டென்று வெடிப்பது) என்றும், டப்பாசு (டப்பென்று வெடிப்பது) என்றும் பலவிடத்துப் பலவித மாய்ப் பொதுப்பெயர் கொள்ளும். இக்காலச் சிறார் வேட்டுக ளெல்லாம் தீபாவளி முதலிய திருவிழாக் காலங்களில் ஜப்பான் நாட்டினின்றும் வரவழைக்கப்பட்டு விற்கப்படுகின்றன. ஜப் பான் வெடிகள் வருமுன்னர் நந்நாட்டுச் சிறார் தாமே வெடிகள் செய்து வந்தனர். இக்காலத்தும் சில சிறார் வெடியுப்பும் மனோ சிலையும் தனித்தனி அரைத்துச் சீனிக்கற்களுடன் சேர்த்துக் கல்வெடி செய்வதையும் கரித்தூளும் நெல்லுமியுஞ் சேர்த்துப் பொரிவாணஞ் செய்வதையும் கண்கூடாகக் காண்கின்றோம். இங்ஙனஞ் செய்தற்கியலாத இளஞ்சிறுருங்கூடப் பொரிவாணஞ் சுற்றும் பாவனையாய், இருகைகளையும் நீட்டிக் 'கிறுகிறு வாணம் கின்னறு வாணம்' என்று சொல்லிக்கொண்டு சுற்றி விளையாடு வதை இளமைமுதற் கண்டிருக்கின்றோம். சிறியோர் செய்வன வும் விளையாடுவனவுமெல்லாம் பெரும்பாலும் பெரியோர் செய் பவற்றைப் பின்பற்றியேயாம். (சிற்றில், சிறுதேர், மணற்சோறு, மண்ணுங்கட்டிக் கலியாணம் முதலியனவுமதற் குதாரணம்)

இனிப் பெரியோர்க்குரியன பொதுவாய் வாணங்களெனப் படும். அவை கம்பவாணம், கட்டுவாணம் (வாணக்கட்டு) ஈச்ச வாணம், பொரிவாணம், காவடிவாணம், குதிரைவாணம், சேவல்வாணம், அவுட் (ஆங்கிலப்பெயர்) எனப் பல வகைப் படும். இவற்றை யெல்லாம் தென்னாட்டிற் றிருவிழாக் காலங் களில் சிறக்கக் காணலாம். இவற்றுட் பெரும்பாலன வட பாகங்களிலில்லை. (இக்கட்டுரை முழுதும் வடநாடு தென்னா டெனச் சுட்டுவதெல்லாம் சென்னை மாகாணத்தின் வடபாகத் தையும் தென்பாகத்தையு மென்றே தெரிந்து கொள்க.)

வாணமென்னுஞ் சொல் வடமொழியிற் பாணமெனத் திரி யும். சில வகர முதற்றமிழ்ச் சொற்கள் வடமொழியிலும் அதன் தன்மை அமைந்த பிறமொழிகளிலும் பகரமுதற் சொற்களாகத் திரிதலியல்பு. வாத்தைப் பாத்தென்றும், வாட கையைப் பாடகையென்றும், வண்டியைப் பண்டியென்றும் கூறுவர் தெலுங்கர். தெலுங்கு ஒரு கொடுந்தமிழ் மொழி யேனும் இலக்கண விலக்கியச் சார்பினால் வடமொழித் தன்மை சான்றது. வாணமென்பதற்கு அம்பென்பது பொருள். வாளி யென்பது வாளம், வாணம் எனத்திரிந்தது. அதற்கு வளைந் தது, ஒளியுள்ளது வாலுள்ளது என்பன பொருளாம். இவற் றுள் முன்னதற்கு வள் பகுதி; இடையதற்கு வாள் பகுதி; கடையதற்கு வார் பகுதி. கடகாலின் வளைந்த பிடிக்கு வாளி யென்று பெயர். பின்னர் அது சினையாகுபெயராய் அல்லது தானியாகு பெயராய் அக்கடகாற்கே ஆகிவந்தது.

> "வாளொளியாகும்"
> "வார்தல்* போகல் ஒழுகல் மூன்றும்
> நேர்பும் நெடுமையும் செய்யும் பொருள"

என்பன தொல்காப்பியம்.

இவற்றுட் பின்னிரண்டும் சிறந்தவை. பிறைபோல் வளைந்த முகத்தையுடைய பிறைமுகம் என்னுமோர் அம்பு முன் காலத் தில் வழங்கினதேனும் அது வாளியென்னும் பெயர்க்குக் காரண

---

*வார்—வால் (போலி)

மாயிற்றென்றல் அத்துணைப் பொருத்தமுடைத்தன்று. வாணம் முன் காலத்தில் அம்புபோலப் போர் முனையில் வழங்கப்பட்டு வந்ததாகத் தெரிகின்றது. அதனையே அக்கினி யஸ்திரமெனப் புராணங்கள் கூறுநிற்கும். இனி, அதற்கினமான வாயுவஸ்திரம் வருணாஸ்திரம் முதலியவும் கூறப்படுகின்றன. அவற்றை இனமுறையிற் கூறிய இல்பொருளாகவே கொள்ள வேண்டும். இக்கால முறைப்படி அவற்றை முறையே நச்சுக்காற்று (Poisonous gas) என்றும், நச்சுப்புனல் (liquid poison) என்றும் கூற இடமிருப்பினும் பொருந்தாது. கண்ணபிரானொடு சண்டை செய்த வாணாசுரன் என்பவன் பலவகை வாணங்களை விட்டதாகத் தெரிகின்றது. இராமாயணத்திலும் நாகாஸ்திரம், பிரமாஸ்திரம் முதலிய வாணச்சிறப்புகள் கூறப்படுகின்றன.

தென்னாட்டுப் பழம்போர்த் துறைகளை விரித்துக்கூறும் தொல்காப்பியத்தில் வாணத்தைப்பற்றி ஓர் குறிப்பு மின்று. உழிஞைப்போரில் நெடுநாள் முற்றியும், அகத்தோன் வருபகை பேணா ஆரெயிலின்கண், ஊர் சுடுவதற்காகப் புறத்தோன் கட்டு வாணங்களை வழங்கி யிருக்கலாமென்று கருத இடமுண்டு. கட்டு வாணங்களை வழங்காவிடினும் எயிலோரம் ஒரு கம்ப வாணத்தை நட்டுக் கொளுத்தின், புறத்தோன் கருதியது எங்ஙனம் கைகூடுமென்பது எவர்க்கும் புலனாகும். இது 'முரணிய புறத்தோன் அணங்கிய பக்கத்துள்' அடங்கும். அஃதேல், தொல்காப்பியத்துள் இஃதேன் கூறப்படவில்லையெனின், போர் முனையிற் செய்யப்படுவதெல்லாம் ஓர் இலக்கண நூலிற் கூறப் படாவென்றும், உறுமனத்தானும் உடல்வலியானும் செய்யும் மறப் போரைச் சிறப்பித்துக் கூறுவதே தொல்காப்பிய நோக்க மென்றும், பல வினைத்தொகுதிகளான துறைகளையே தொல் காப்பியங் கூறுமென்றும், உழிஞைப்போரில் ஒரோவிடத்துச் சிறுபான்மை நிகழ்வதொன்றை நியதியாகக்கூற லொவ்வாதென் றும், ஒருகால் நிகழின் அஃது 'அணங்கிய பக்க'த்துள் அடங்கு மென்றுங் கூறிவிடுக்க. வாணம் நெருப்பின் தொழிலன்றி வய வர் மறமன்று; அதூஉம் இராப்போர்க்கே சிறப்புடைத்து.

## கிணறு வேட்டு

இனி, கிணறு வெட்டுக்குக் கருமருந்தைப் பயன்படுத்துவதும் தொன்றுதொட்டு வந்த வழக்காகும். சோணுடு காவிரிப் பேரியாற்றுப் பாய்ச்சலானபடியால் பாண்டி நாடுபோல் கிணற்றுநீரை வேளாண்மைக்கு வேண்டுவதன்று. சோணுடு முழுமையும் பொன்னிநாடு, புனனுடெனப் பட்டமையே அதைப் புலப்படுத்தும். குமரிநாடமிழ்ந்த பின் வைகையும் பொருநை (தாமிரபரணி) யுமே பாண்டி நாட்டியாறுகளாதலானும், அவை காவிரிபோலப் பேரியாறுகளன்மையானும், நெட்டிடையிட் டிருத்தலானும், பாண்டிநாட்டின் பெரும்பாகப் பயிர்த்தொழில் கிணற்றிறைவையாலேயே நடந்து வருகின்றது. ஆற்றுப் பாய்ச்சலில்லா விடங்களிற் குளங்களிருப்பினும், அவை மழையின்றி நிரம்பாமையானும், நிரம்பினும் விரைந்து வற்றுகின்றமையானும், அவ்வவ்வூர்ப் பாய்ச்சலுக்குப் போதாமையானும், கிணற்றுநீர் இன்றியமையாததா யிருக்கின்றது. சோணுட்டார் காவிரியாற்றையே பெரிதும் நம்பி யிருத்தலின், பாண்டி நாட்டார்போல உழவுத்தொழிலை உழந்து செய்ய வேண்டியதில்லை. ஓரோவழி வேண்டிய திருப்பின் உழந்து செய்வதுமில்லை. பயிர்த் தொழிலுக்குப் பாண்டி நாட்டுழவர்க்குள்மட்டும் வழங்கிவரும் 'பாடுபடுதல்' என்னும் குறியீடே இதைப் புலப்படுத்தும். சோணுட்டார் காவிரிப் பாய்ச்சலின்றி நெல் விளைப்பதருமை. பாண்டி நாட்டாரோ குளம் வற்றியக்காலும் கிணற்று நீரால் நன்செய் விளைவும் புன்செய் விளைவும் விளைக்கின்றனர். நன்செய் விளைவினும் புன்செய் விளைவு தென்னுட்டிற் சிறந்திருப்பதே அங்குள்ள நீர்க்குறைவையும் கிணற்றிறைவையையும் புலப்படுத்தும். இன்றைக்கும் தென்னுட்டுழவர்க்கு அவ்வக்கால உணவாயுள்ள சாமை, காடைக்கண்ணி, குதிரைவாலி முதலிய கூலவகைகள் வடநாட்டார்க்கு என்னவென்றே தெரியவில்லை. கிணறுகள் வடபாகங்களில் தென்னுட்டிற்போல ஏராளமாயும் அகன்றும், சமுக்கமாயுமிராமல், சிலவாயும் சிறியவாயும் வட்டமாயு மிருக்கின்றன. கிணறு

கள் அகன்ற சதுரங்களாயிருப்பின் ஆழமாய்த் தோண்டவும், பக்கத்திற்கொரு கமலை போடவும் உதவும்.

தென்னாட்டின் பெரும்பாகம் ஆற்றோரமாயின்மையானும், அடிப்படை கற்பாங்கானமையானும், கிணறு வெட்டுவதற்கு ஆழமாகத் தோண்டவும் கற்பாறைகளைப் பெயர்க்கவும் வேண்டியிருக்கிறது. அது இருப்புப்பாரை கூந்தாலம் முதலிய கருவிகளாற் கூடாமையின் வெடிமருந்தின் உதவி வேண்டியதாயிருக்கிறது. கற்பாறையில் ஒரு சுரங்கம் தோண்டி அதற்குள் வெடிகுழாய்க்குட் செலுத்துவதுபோல் கருமருந்தையும் கரம்பையையுஞ் செலுத்தி நெருப்பை வைக்கிறார்கள். அது பேரொலியுடன் வெடித்துப் பெருவலியுடன் புடை சூழ்ந்த பாறைகளை யெல்லாம் படைபடையாகப் பெயர்த்து விடுகின்றது. இதே முறையில்தான் திருவிழாச் சிறப்பிற்குப் போடும் பிடாங்கு வேட்டும் வெடிக்கின்றது. பிடாங்கு ஒலிபற்றிய சொல். பிள் என்னும் மூலத்தினின்றும் பிடுங்கு என்னும் பகுதியினின்றும் பிறந்தது. தென்னாட்டில் எல்லாக் கிணறுகளும் சுரங்க வேட்டாலேயே வெட்டப்படுகின்றன. சில கிணறுகள் மிகப் பழமையாயிருப்பதுபற்றி, இவ்வழக்கமும் பண்டு தொட்டே வந்திருத்தல் வேண்டும். கிணறு என்ற பெயர் மிகப்பழைய நூல்களிற் காணப்படாவிடினும், அதற்கினமான கேணி என்னும் பெயர் காணப்படுகின்றது. கேணி, கிணறு என்னுமிரண்டும் கீள் என்னும் பகுதியினின்றும் பிறந்து திரிந்தவை. (கல்—கில்—கீள்=தோண்டு) கற்பாங்கான இடத்தில் வெட்டப்பட்டதே பண்டு கேணி யெனப்பட்டது. திருவிளையாடற் புராணத்திற் கேணி யென்னுஞ் சொல் நிகழ்கின்றது (வன்னியுங் கிணறு மிலிங்கமு மழைத்தது). மக்கள் பெருகாத முன் காலத்தில் யாற்றுவளமுள்ள மருத நிலங்களிலேயே உழவர் குடியிருந்தனர். மக்கள் பெருகவே யாறில்லா நிலத்தும் உழவர் உறைய வேண்டியதாயிற்று. அதனாலேயே கிணறுகளும் வேண்டியவாயின.

இதுகாறுங் கூறியவற்றால், வெடிமருந்து தென்னாட்டி

லேயே தோன்றியதென்றும், அது முதலாவது வாணமாகப் போருக்குப் பயன்படுத்தப்பட்டதென்றும், அதன் பின்னரே அது வேடிக்கைக் காயிற்றென்றும், கிணறுண்டான காலந் தொட்டுப் பாரை பெயர்க்கவும் உதவி வருகிறதென்றும் தெரிந்து கொள்க. துப்பாக்கியும் பீரங்கியும் பிறகுண்டுகளுமே மேனாட்டாராற் பிற்காலத்துச் செயப்பட்டவை.

---

# செல்வமும் அதன் பயனும்

[திருவையாறு தி. அ. சித. சிதம்பர சுவாமிகள்]

[சிலம்பு ம, பரல் உ, ௬௬-வது பக்கத் தொடர்ச்சி]

"மேலலார் செல்வமே போற்றது நிழலி"

என்னுங் கவிக்கு இலக்காகலாது. சிலர்க்குச் செல்வம் வந்த போதே கண்ணும் மறைகின்றது. அஃது மறைய நன்மை தீமை யறியமாட்டாது விலங்கின்றன்மையே மேலிடுவதால் தீயவே செய்கின்றனர். அப்போழ்தத்துத் திரு வருந்துகின்றனள். இஃது "தவஞ்செய்த தவமால்" எனவும் உன்னுகின்றாள். "சிறியவர் செல்வம்போற் சேர்ந்தார்க்கு நிழலின்றி" என அவர் செல்வம் தழையுதிர்ந்த மரத்திற் குபமானமாகக் கொள்ளப்படுகின்றது. ஆதலால் செருக்கினைச் செல்வர் கொள்ளா தொழிவாராக.

இனிச் செல்வத்தாற் பெறும்பயனை யாராய்ந்து கூறுவாம். மனமகிழ்ச்சியே செல்வந்தரும் பயனெனக் கூறலாம். வறுமை கவற்சியைத் தருவதொன்றாகும். செல்வர் குறைய வுண்டாலும் அவர் ஒளிவிடு முடலினராய்க் காணப்படுகின்றனர். வறியர் நிறைய மாந்தினும் பசையற்றெய்த்த மேனியராய்ப் பார்க்கப்படுகின்றனர். இங்ஙனமாதற்கு மனமகிழ்ச்சியும் மனக்கவற்சியுமே யேதுவாகும்.

மனக்கவற்சி யுடையார் உடலைப்பேணினும் மிளிராது. மகிழ்ச்சி யுடையார் பேணுதொழியினும் மிளிருதல் காணலாம். சில பெரியார் மண்ணு மேனியராய் மாசுறு மாடையினராய்

பட்டினி விட்டுண்ணு முணவினராய்த் திரியினும் அவர் யாக்கை பொன்போ லொளிர்கின்றது; மனமகிழ்ச்சியே காரண மெனக் கூறலாம். மனமகிழ்ச்சி யுடையார்க்கே அறிவும் பெருகுகின்றது. கவற்சியுடையார்க்கோ அது மயங்கி யொழி கின்றது. மூடனாய்த் திரியுமொருவனுக்குச் செல்வம் வந்தாயின் அவன் அறிவு விளக்கம் பெருகப் பெறுவான். துன்புறூஉந் துவ்வாமை யுடையார்க்குக் கல்வி கற்பிக்கலாகாது என்பார், 'பிணியனேழை' எனக் கற்பிக்கலாகாதார் குழுவினுட் சேர்த்துக் கூறியமையும் இதனை விளக்குகின்றதல்லவா? ஆதலால், செல்வம் மகிழ்ச்சிக்கு ஏது வென்னலாம்.

"செல்வர் மனம்போல் மகிழ்ந்த நல்கூர்ந்தார் மேனிபோற் புல்லென்ற காடு" எனவருங் கார் நாற்பது வலியுறுத்து மென்க.

ஆனால் இவறன்மாலையர்க்கு மகிழ்ச்சியுண்டா? அவர்க்கு மகிழ்ச்சியே கிடையாது. வறியர் இருவகையர், பொருள் பெற்ற வறியர், பொருளற்ற வறியர் என. பொருள்பெற்ற வறியர், இவறன் மாலையரேயாவர். "எனதெனதென்றிருக்கு மேழை" யென்றனர் ஒரு பெரும்புலவர். ஏழையென்பது அறிவிலியையும், இல்லாரையு முணர்த்துமென்பது ஒருதலை. இப் பொருளுடைய வறியன் 'நடுவண தெய்தலையும், எய்தலா மென் பதை யயர்ந்தவனாதலின் அவனுக்கு மகிழ்ச்சி கிடையாதென்க. ஒரு பொருளைக்கண்ட மாத்திரத்தில், கேட்ட மாத்திரத்தில், பெற்ற மாத்திரத்தில், மகிழ்வதெதனால்? அதனாலாம் பயனை பெறற்பொருட்டேயாம்.

இவறன்மாலையற்கு அதனாலாம் பயனைப்பெற விருப்ப மில்லாமையால் மகிழ்ச்சியை யெங்ஙனங் காண்பன்? இழந்த காலத்து இன்னலே யெய்துவன் இருந்து பயனெய்தாமையின்.

"உண்ணா னொளிநிறான் ஓங்கு புகழ்செய்யான்
துன்னருங் கேளிர் துயர்களையான்—கொன்னே
வழங்கான் பொருள்காத் திருப்பானேல்அஆ
இழந்தானென் றெண்ணப் படும்.

எனக் கூறுகின்றனர் ஒரு புலவர்.

"செயற்பால செய்யாதிவறியான் செல்வ முயற்பாலதன் றிக் கெடும்" என்னுங் குறட்பாவிற்குப் பரிமேலழகர் விளக்கவுரையில் 'அறஞ் செய்யாமையானும் பொருள் பெருக்காமை யானும் உயற்பாலதன்றி யென்றும், இன்பப்பயன் கொள்ளா மையின் கெடுமென்றுங் கூறினர்' என எழுதினமையுங் காண்க.

இன்பம் கொள்ளலும் அறஞ்செய்தலும் அவாவுமவனே பொருளால் மகிழ்ச்சி யடைகின்றான். ஆதலின் இன்பமும் அறமும் செல்வத்தின் முக்கிய பயனுமென்க. இன்பமும் அறத்தின் வழி வருமாயின் இன்பமாமன்றி மறத்தின் வழிவருவது அப்பொழுது இன்பமாகத் தோன்றினும் பின் றுன்பத்தையே பயக்கும்.

பொருளாற் பெறுமின்பம் வேறு ஒன்றும் பயவாது. ஆனால் அறமோ பொருளுந்தரும், இன்பமுந்தரும். ஆதலின் அறம் செய்தலையே பொருளின் மிக முக்கிய பயனாகக்கொள்ளல்வேண்டும். அறம் பலவாயினும் ஈதலே சிறந்ததாகும். இறைவன் அறவடிவாகத் திகழ்கின்றான். எனினும் ஈதலறமே, அவனது சிறந்த வடிவாகும். அறமென்றமாத்திரையில் ஈதலையே குறிக்கும். இதனாலன்றோ நம்மன்னையார் 'ஈதலறம்' என்றனர். வறியார்க்கொன்றீவதே யீகையாதலின் உண்டி குறித்தும், உணர்வு குறித்தும் ஈயலாம். உணர்வு குறித்தீவதே சிறப்பாகும். அறிவுடையான் எல்லாம் உடையவனாவனாதலின் என்க. ஆதலின் செல்வத்தின் மிக முக்கிய பயன் ஈதலே எனக்கொள்ளல் தகும்.

"தெண்கடல் வளாகம் பொதுமை யின்றி
வெண்குடை நிழற்றிய வொருமை யோர்க்கு
நடுநாள் யாமத்தும் பகலுந் துஞ்சான்
கடுமாப் பார்க்குங் கல்லா வொருவர்க்கும்
உண்பன நாழி யுடுப்பன விரண்டே
பிறவு மெல்லா மோரொக்கும்மே
செல்வத்துப் பயனே யீதல்
துய்ப்பே மெனினே தப்புந பலவே"

எனவரு நக்கீரனார் மெய்ம்மொழியும்

'பிறக்கும் பொழுது கொடுவந்ததில்லை பிறந்து மண்மேல்
இறக்கும் பொழுது கொடுபோவதில்லை இடைநடுவிற்
குறிக்கு மிச்செல்வஞ் சிவன்றந்தென்று கொடுக்கறியா
திறக்குலா மருக்கென் சொல்லுவேன் கச்சியேகம்பனே.

எனவரும் பட்டினத்தடிகள் திருவாக்குங் காண்க.

செல்வம் பெறுமின்! சிறக்க வீயுமின்!

---

# மனைவாழ்க்கையும் புதல்வர்ப்பேறும்

[திரு. கி. குப்புசாமி முதலியார் அவர்கள்]

[சிலம்பு ௰, பரல் ௨, ௫௭-வது பக்கத் தொடர்ச்சி]

இவ்வாறன்றிக் களவியல் கூறுவதுபோல்,

"இன்பமும் பொருளுமறனு மென்றாங்கு
அன்பொடு புணர்ந்த ஐந்திணை மருங்கில்
காமக்கூட்டங் காணுங்காலை மறையோர்தேஎத்து
மன்றல் எட்டனுள் துறையமை
நல்யாழ்துணைமையோ ரியல்பே"

என்றும்,

"அன்பின்ஐந்திணை களவெனப்படுவது
அந்தணர் அருமறை மன்றலெட்டினுள்
கந்தருவ வழக்க மென்மனார் புலவர்"
"அதுவே தானே அவளே தமியர்காண
காமப்புணர்ச்சி யிருவயின் ஒத்தல்"

என்றும் கூறுகின்ற சூத்திரங்களின்படி கந்தருவ வழக்கத்தை யேன் மேற்கொள்ளுதலாகாது?" என்னின், அது உலகியல் வழக்கிற்குப் பெரிதும் பொருந்துவதாகக் காண்கிலோம். ஏனெனில், தலைவனுந் தலைவியும் தம் உணர்வினரான்றி எதிர்ப்படுவர் என்கின்றனர். அது ஊழ்முறை கூட்டும் என்கின்றனர். "தலைமகனும் தலைமகளும் தமியராய் ஒருபொழிலகத்து எதிர்ப்பட்டு தம்முணர்வினரான்றி வேட்கை மிகவினால் உணர்வது என்பது

காமப்புணர்ச்சி" என்கின்றனர். அது எவ்விதமோவெனின், அவன் வேட்டையினிமித்தமாகப் பல இளைஞர் சூழ ஓர் மிருகத்தினை நாடிக் காட்டிடத்தே செல்வானென்றும், தான் நாடிய மிருகத்தினிமித்தம் தனியாகப் பிரிந்து ஓர் சோலையிடம் வருவானென்றும், முன்னரே ஆயத்தொடு சென்ற தலைவி ஆயத்தார் யாவரும் பிரிய தனிநின்று மயில் விளையாட்டைப் பார்த்திருப்போளை அச்சோலையில் காணபானென்றும் கூறுகின்றனர்.

உலகத்துத்தோன்றும் மக்கள் யாவரும் ஆயத்தோடு செல்வதற்கும், இளைஞர் சூழச் செல்வதற்கும், தனிப்பிரிவதற்கும், உணர்வின்றிக் காண்பதற்கும் இயலுமோ ? மகனாய்த் தோன்றிய ஒருவன் தான் செய்யவேண்டிய ஆறு கடமைகளைச்செய்து முடிப்பதற்குரிய பொருள்தேடி மணம் புணர்ந்து துணைமை கொண்டு தொல்லோர் வழி நின்று தன் கடன் முடிப்பதற்கே ஏலாதிருப்பதைப் பல மக்களிடத்தும் காண்கின்றோம். இவ்விதமிருக்க, எண்வகை மணத்துள் காந்தருவத்தைக் கைக்கொள்வது நாடக வழக்காக உள்ளதேயன்றி உலகியல் வழக்காகவும், காட்சியளவாகவும் காண்பதற்கில்லை.

தற்கால அறிஞர் சிலர் தாம் கற்ற நூலளவாலேயே உலகியல் அறிவு நாடாது, "நாங்கள் பண்டைத் தமிழர் வழி நிற்போம். அவர் சென்ற வழியே செல்வோம்" என்று பிரசங்க மேடைகளில் முக்காலுக்கு ஏகா பருவத்துக்குமுன், முக்கால் என்னுந் தடியைக் கைக்கொண்டு அரசன் ஒருவன் உரையினின்றும் வாளையுருவி யூன்றி நிற்பதுபோல் தலை தடுமாற்றங் கொண்டு பிதற்றுகின்றனர்; இவ்வறிஞர்கள் குலனும் நலனும் வேண்டாமென்கின்றனர். நக்கீரர் தாம் எழுதிய உரையினுள் தலைவனையும் தலைவியையும் பற்றிக் கூறுகின்ற காலத்து "குலனும் நலனும் உருவுந் திருவும்" என்றும், "எட்டியுஞ் சுட்டியுங் காண்பிக்கக்கூடாத தகுதியும்" வேண்டுமென்றும் கூறுகின்றார். ஆதலால் இவை கருதாது எவரேனும் இனிமை தரக்கூடியவராய், நல்லுணவு என்று தாமெண்ணும் உணவை இடுபவராய் இருப்பின் அவர் அடிச்சுவடுகளைப்பற்றி உறங்குதலே

போதும் என்கின்றனர். இவையெல்லாம் நாடக வழக்கே யன்றி உலகியல் வழக்கிற்குச் சிறிதும் பொருந்தாது என்று அநுபவ வாயிலாக உணர்ந்த நூலறிஞர்கள் அறிவார்கள். ஆதலால் முன்னர்க்கூறியபடி கொடுப்பக் கொள்ளும் மணமே வாழ்க்கைத்துணையை அடையும் வழியாகும்.

இவ்விதம் கற்பியலுள் கூறிய வண்ணம் மணத்தைப் புரிந்தும் நால் வருணத்தார் தம்முள் நெறி வழுவிச் செல்லுகின்றனர் என்பது கருதி, அக்காலத்தேயே இருடிகள் முதலினோர் அவ்வவ்வருணத்தோர்க்கு இவ்விவ்விதமாக மணம் இருத்தல் வேண்டும் என்று வேறுபடுத்தி அதனை நிலை நாட்டினர் என்பதனையே,

> "பொய்யும் வழுவும் புகுந்தகாலை
> ஐயர் யாத்தனர் கரணமென்ப"

என்று கூறியுள்ளனர். இவ்விதம் நூல் வல்லவர் இவ்விவ் வருணத்தார்க்கு இவ்விவ்விதம் மணமிருத்தல் வேண்டும்; தலைவனைத் தலைவி தெய்வமாகப் பாவித்தல் வேண்டும்; தாய் தந்தையர் கற்பித்த வழியும், தலைவன் கற்பித்த வழியும் ஒழுகுவதே கற்பு என்றும் பண்டை நாள் தொடங்கி இக்காலம் வரையும் நடந்துவரும் இக்காலத்து இந்தியப் பெண்களில் சிலர், தலைவனைவிட்டு நெடுந்தூரம் வசிப்பதும், தலைவன் தகுதியின்மை கருதி அவனை யொழித்து தகுதியுடையானென்று தாம் எண்ணுகின்ற மகனை மணப்பதும், பெரிதும் காமக்கிழத்தியர்போல் ஒழுகுகின்ற ஒழுக்கத்தோடு நில்லாது இவற்றைச் சட்டமாகவும் ஆக்கவேண்டும் என்று முயல்வார்களாயின், இக்காலத்துக் காந்தருவ மணம் ஏதாகும்? இல்லதும் இனியதும் புணர்த்தும் நல்லிசைப்புலவர் நாடக வழக்கிற்குக் கூறிய வழக்கினை இப்போது கொள்வது ஆகாது. ஆதலால் கொடுப்பக் கொள்வதுவே மணமும், துணையுமாகும்.

இனி, 'இவ்விதங்கொண்ட மனைவி எவ்வித தகுதியுடையளாயிருத்தல் வேண்டும்? நலம் என்று கூறினன்; அதாவது அவளது நன்மை. நலமெனில் அழகு என்று கொள்ளுதல்

மிகப்பொருத்தமன்றோ? அழகிற் சிறந்தவளாயிருத்தல் வேண்டும் போலும்?' என்று ஐயுறுவண்ணம் முதற் றிருக்குறளிலேயே,

"மனைத்தக்க மாண்புடையளாகித் தற்கொண்டான்
வளத்தக்காள் வாழ்க்கைத் துணை"

என்றார். இதற்கு உரை வரைய வந்த பரிமேலழகன், "மனையறத்துக்குத்தக்க நற்குண நற்செய்கை யுடையளாய் தன்னைக் கொண்டவனது வருவாய்க்குத்தக்க வாழ்க்கையை யுடையாள் அதற்குத் துணை" என்று எழுதி, "நற்குணங்களாவன: துறந்தார்ப் பேணலும், விருந்து அயர்தலும், வறியார் மாட்டு அருளுடைமையும்" முதலாயின. நற்செய்கைகளாவன: "வாழ்க்கைக்கு வேண்டும் பொருள்களை யறிந்து கடைப்பிடித்தலும், அட்டில் தொழில் வன்மையும், ஒப்புரவு செய்தலும்" முதலாயின. "வருவாய்க்குத் தக்க வாழ்க்கையாவது: முதலை யறிந்து அதற்கு இயைய அழித்தல்" என்று கூறினன். இதனால் துணையிடத்து இவ்விரண்டு நன்மையுமே சிறந்தன என்று கண்டோம். துறந்தார்ப்பேணலும் என்றமையாலேயே தன் தலைவன் செய்யவேண்டிய கடமைகளுள் ஒன்றைத்தான் உடனிருந்து நடத்துபவள் என்றும், விருந்து அயர்தல் முதலியவைகள் ஏனைக் கடன்களைச் செய்தற்கு உரியவள் என்றுங் கண்டோம்.

அவ்வளவோடு நில்லாது வருவாய்க்கு இயைய அழித்தல் என்பது பெரிதும் போற்றத்தக்கதாகும். இக்காலத்துப் பெண்மணிகளுள் பலர் தங்கண்மணிகளென்று கொள்ளப்படுகின்ற ஆடவரது வருவாய் ஒன்றாக இருக்க மூன்றாகச் செலவழித்து அல்லற்கடலுள் ஆழ்த்துகின்றனர். இது கருதியன்றோ,

"ஆகா றளவிட்டி தாயினுங் கேடில்லை
போகா றகலாக் கடை"

என்று விதந்து கூறினர். ஈதே இல்லறத்தான் ஒருவனுக்குச் சிறந்ததோர் வழியாகுமாதலால், அதனைக் கடைப்பிடிக்கும் மனை

வியே வாழ்க்கைத்துணையாவாள். அவ்வளவோடு அமையாது வாழ்க்கைக்கு வேண்டும் பொருள்கள் அறிந்து கடைப்பிடித்தல் என்பது எத்தனை புத்தி போதிப்பாக உள்ளது. எக்காலத்து எப்பொருள் கிடைக்குமோ அப்பொருளை வாங்கிச் சேர்த்து இல்லறத்தை நடத்துபவளே துணையாவாளன்றி, கிடைக்குங் காலத்து வாங்காது நின்று கிடையாக் காலத்துப் பெரும் பொருள் கொடுத்து வாங்கி வாழ்க்கையை நடத்துபவள் துணை யாகாள்.

இனி, அட்டில் தொழில் வன்மை என்பது பெரிதும் போற்றத்தக்கதொன்றாகும். பண்டைக்காலத்து அரசர்களது மகளிரும் அட்டிற்றொழில் வன்மையை யுடையவராயிருந்தனர் என்று காண்கின்றோம். இக்காலத்தைய பெண்களோ தம்மைக் காக்கக்கூடிய தகுதியில்லாத தந்தையர்க்குப் பெண்களாக இருந்தும் இலவச பாடசாலைகளில் படிக்கின்ற கல்வியையே பெரியதோர் தகுதியுடைய கல்வியென்றும், அதனால் எல்லாவற் றையும் அடைந்துவிடலாமென்றும் எண்ணி அட்டிற்றொழில் செய்யும் இடத்தும் செல்லாது வளர்ந்து பின்னர் வறுமை யாளன் ஒருவனுக்கு வாழ்க்கைப்பட்டுக் கிடைத்த உணவுப் பொருளையுஞ் சமைப்பதற்கு அறியாது தயங்கித் தவிக்கின்ற னர். ஆதலால் தேவரவர்கள் போதித்த முதற் குறளிலேயே வாழ்க்கைத் துணையின் நலம் ஈது எனப் பெரும்பான்மையுங் கண்டோம்.

இனி, நில்லாப்பொருளை நிலையென மயங்கிப் புல்லறி வாண்மை கொள்ளுஞ் சிலர், "ஈதெல்லாம் வறிஞர் கூறும் வழக் காகும். அரசர்போன்று வாழ்கின்றார் மனைவியர்கட்கு இவ்வித செயல்கள் வேண்டுவதில்லை" என்று கூறித் தாமும் இடர்ப் பட்டுப் பிறரையும் இடர்ப்படுத்தாவண்ணம்,

"மனைமாட்சி யில்லாள்கண் ணில்லாயின் வாழ்க்கை
எனைமாட்சித் தாயினு மில்"

என்று வரையறுத்துக் கூறினர். ஆயின் மாட்சிமையுடைய மனைவியிருப்பின் ஒன்றுமில்லாத தலைவனுக்கும் எல்லாம் உண்

டாகும் தகுதியாகுமோ? பொருள் தேடுபவன் தலைவன் தானே? என்று கூறி யிடர்ப்படாவண்ணம்,

"இல்லதென் இல்லவள் மாண்பானல் உள்ளதென்
இல்லவள் மாணுக் கடை"

என்று இல்வாழ்வானுக்கு வேண்டுவது இல்லாளது நற்குண நற்செய்கைகளே ; பிற அல்ல என்று முடித்துக் காட்டினர். இதற்கு,

"பகல்வித்திய செந்நெல் மல்லல்முளை வாரிக்கொடு வந்தால்
வல்லவாறு அமுது ஆக்கலுமாகும்"

என்னும் இளையான்குடி மாற நாயனரது மனைவியின் கூற்றே போதுமானது. ஈதெல்லாம் கேட்டு, ஓர் மனைவிக்கு நற்குண நற்செய்கைகள் இருப்பின் போதும். ஏனைய கற்பென்னுங் கலங்கா நிலைமை ஒன்று வேண்டுமென்பது மிகையாகும்' என்று மயங்கிக் கூறுவாரை மறுப்பான் கருதி,

"பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னுந்
திண்மை யுண்டாகப் பெறின்"

என்றனர். பின்னும் கற்பொன்று இருக்குமாயின், அப்பெண்ணை யடைந்தானொருவன் எல்லா நன்மைகளையும் அடைந்து விடுதல் கூடும் போலும் ? என்று புன்னகைகொண்டு கேட்பார்க்குப் பதில் கூறுவார்போன்று,

"தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யு மழை"

என்று கற்புடைய ஒருத்திக்குத் தெய்வமும் ஏவல் செய்யும்; அவளது ஆற்றலுக்கு எதைச் சமமாகக் கூறுவது ? என்றனர். இதனை 'போது விடிதலாகாது' என்ற நளாயினியின் கதையால் அறிதல் கூடும்.

இனி, ஈதெல்லாங்கேட்ட மக்கள், 'ஓ நல்லாசிரிய ! எங்களுக்குப் பெண் என்றால் எது என்பதைத் தொகையாகவும் வகையாகவும் கூறுதல் வேண்டும்' என்னலும் தெய்வப்புலவர், 'மக்காள் !

"தற்காத்துத் தற்கொண்டாற் பேணி தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண்''

என்று தொகை கூறினர். இதற்கு உரை வரைய வந்த பரிமேலழகன், "கற்பினின்றும் வழுவாமல் தன்னைக்காத்து, தன்னைக் கொண்டவனையும் உண்டி முதலியவைகளால் பேணி, இருவர் மாட்டும் நன்மை யமைந்த புகழ் நீங்காமல் காத்து மேற்சொல்லிய நற்குண நற்செய்கைகளினும் கடைப்பிடி யுடையாளே பெண்ணாவாள்'' என்று எழுதினன்; இதுகேட்ட மாணாக்கருள் பெருமிதமே தனக்குப் பொருளென மதிக்கும் ஒருவன், 'என்னை! ஆசிரிய! பெரியதோர் மதில்களும், வாயிற் காவல்களும் உடைய மாளிகைகளின் வசிக்கும் மகளிர்க்கு வேறுமோர் காவல் வேண்டுமோ? ஈதெல்லாம் வறுமையாளர் கூற்றேயன்றிப் பொருளுடையார் கூற்றாகாது' என்னலும், 'ஓ! மாணாக்கனே! ஆகாய விமானத்துஞ் சென்று எண்ணிய மகளுடன் எண்ணிய எண்ணத்தை முடித்து வந்தார் கதைகள் கேட்டிலை போலும்! இக்காலத்தும் ஆகாய விமானங்கள் பறப்பதைக் காணவில்லைபோலும்!' என்று இடித்துப் புத்தி போதிப்பார்,

"சிறைகாக்கும் காப்பெவன் செய்யு மகளிர்
நிறைகாக்கும் காப்பே தலை"

என்றனர். அது கேட்ட அறிஞன், "இருக்கட்டும். தற்காத்தல் சிறப்பு ஈதென அறிந்தேன். அளகைக்கு இறைவன் போல் வாழ்கின்ற என்னை யெதற்கு அவள் பேணுதல் வேண்டும்?" என்னலும், 'ஓ! நன்மாணாக்க! உன்னைப் பேணுதல் உன் பொருட்டன்று; தன்னை யடைந்த தலைவனைப் பேணும் மகளிர் மறுமைப் பயனை யடைவதற்கே யன்றி வேறில்லை என்பார்,

"பெற்றாற் பெறிற்பெறுவர் பெண்டிர் பெருஞ்சிறப்பு
புத்தேளிர் வாழு முலகு"

என்றனர். 'நல்லது! இனியதையே கூறினீர். இனி மண்ணுலகத்தை யாளும் மன்னர்களாலும் மகிழ்ந்து போற்றி 'ராஜமான்ய ராஜபூஜித ராஜகெம்பீர!' என்று அழைக்கப்பட்ட எனக்கு இல்லைவிட்டு வெளிவராத இவளாலாகும் புகழ் எதற்கு?

என்னலும், 'சிற்றறி வுடையோய்! புகழை விரும்பிய இல் லாளை யில்லாதார்க்குத் தம்மை யிகழ்ந்து உரைக்கும் பகைவர் முன்பு ஆண் சிங்கம் போல் நடக்கும் பெருமித நடையில்லை என்பதை யறியாய் போலும்' என்று புத்தி போதிப்பார்,

"புகழ்புரிந்த இல்லிலோர்க் கில்லை யிகழ்வார்முன்
ஏறுபோல் பீடு நடை"

என்றனர். ஈதெல்லாங் கேட்ட மாணுக்கன் 'முன்னர்க்கூறிய நற்குண நற்செய்கைகளைப் பின்னரும் எடுத்து ஓதுவானேன்?' என்னலும், இனிக் கூறப்போகின்ற அணிகலமாகிய புதல்வரைப் பெறுதலைக் கூறுவதற்கு அதனை யெடுத்துக் காட்டுதல் வேண்டு மாதலால் மனைமாட்சி யென்பதைப் பின்னரும் விதந்து,

"மங்கல மென்ப மனைமாட்சி மற்றதன்
நன்கல நன்மக்கட் பேறு"

என்று முடித்துக் கூறினர் என்றனர். வாழ்க்கைத் துணையாக அமைந்த மனைவி செய்யவேண்டிய கடமையைத் தொல்காப்பிய ரும் கற்பியலுள்,

"கற்புங் காமமு நற்பா லொழுக்கமு
மெல்லியற் பொறையு நிறையும் வல்லிதின்
விருந்து புறந்தருதலுஞ் சுற்ற மோம்பலும்
பிறவுமன்ன கிழவோண் மாண்புகள்
முகம்புகன் முறைமையிற் கிழவோற் குரைத்த
லகம்புகன் மரபின் வாயில் கட்குரிய"

என்று கூறினர்.

(தொடரும்)

## காழிக் கண்ணுடைய வள்ளலார் அருளிய

# நியதிப்பயன்*

[வித்துவான் ப. அ. முத்துத் தாண்டவராயபிள்ளை அவர்கள்]

### கலித்துறை

### வினா

ஆகம சாரம தான குகபத் ததியதனிற்
பாகம தான பொருளை நியதிப் பயனதென்றே
வேகம தாக விளம்பிடு தற்கியல் வேணுபுரத்
தேகம தானசிற் குஞ்சரக் கன்றினை யேத்துதுமே. ௧

மந்திர மாவ தெதுகுரு வென்ற வசனமெது
சிந்தனை சேருஞ் சிவதீக்கை யென்றதென் செப்பியிடுஞ்
சுந்தர மான வுபதேச மேதெனச் சொல்லிடுவாய்
தந்திரந் தேருந் தமிழ்க்காழிக் கண்ணுடைச் சம்பந்தனே. ௨

காலத்தி லாரிய னேமுத னுல்வர் கடிதெழுந்து
சீலத்தி னற்சிவ ரூபம் நினைக்குந் திறமிதுவென்
கோலத்த மேனியங் கெத்தல மீதினிற் கொண்டிடுத
மூலத்து ளோர்புகழ் கண்ணுடைச் சம்பந்த சற்குருவே. ௩

பதியதற் கெத்திசை போக்கிச் சலமலம் பாற்றியிடல்
விதிதருந் தூரம தெவ்வள வேகுதல் வெவ்விருளி
னதிமுக மெத்திசை யாகத்திற் பீடை யடைந்திடினும்
வதியு மிடம்சங் கடமாகி லேது வகுத்தருளே. ௪

---

*இஃது வடமொழியில் உள்ள குக பத்ததியின் சாரமாக சீகாழிக் கண்ணுடைய வள்ளலார் தமது கண்ணுடைய பரமாசாரிய மூர்த்தியாகிய திருஞான சம்பந்த வள்ளற்பெருமானை முன்னிலைப்படுத்தி இயற்றியருளியதாகும். (1450 A. D.)

சீகாழிக் கண்ணுடைய வள்ளலாராதீனத்து ஸ்ரீமுத்துச் சட்டைநாத வள்ளலாரது பிரதியையும், வைத்தீஸ்வரன் கோயில் ஸ்ரீசோமசுந்தர தேசிகரது பிரதியையும், சென்னைத் துரைத்தனத்தாரது கையெழுத்துப்பிரதி நிலயப் பிரதியையும், தமது பிரதியையும் ஒப்பிட்டுச் சீகாழி ப. அ. முத்துத்தாண்டவராய பிள்ளை யவர்களால் வெளியிடப்பட்டது.

வலக்கையின் மண்ணொங் கெடுக்குத னீக்கிடு மண்ணெடுத்துத்
துலக்கிடக் கொள்ளும் பிரமாண மேது சொலுங்கரையிற்
சலத்தினுக் கெத்துணை தூர மிருத்த றருந்திசையென்
விலக்கிடக் கையிற் றருமண்ண தேது விதித்தருளே. ௫

மானதி யாகிற் சௌசாதி செய்யும் வகையதெங்ஙன்
ஆன விரவி லருஞ்சுத்தி செய்யு மடைவதெங்ஙன்
ஈன மருவுடற் பீடைய தாகி லியற்றுவதென்
மோன விரதிகள் மூவர்கள் செய்யும் முறையருளே. ௬

கடிக்கீ ழுடியள வாய்மண் கொடுமணிற் காண்டலெத்திக்
கடுக்கான கையணை வாய்கொப் புளிக்கி லருந்திசையென்
மடுப்பான வாச மனுதியிற் பாத மருவலெங்ஙன்
எடுப்பான நெற்றியி னீறணி யாவிடி லேதருளே. ௭

சலமோ சனத்தி லருஞ்சுத்தி செய்யுந் தகைமையெங்ஙன்
புலமேவு சுக்கில நீங்கிடிற் செய்யும் புனிதமெங்ஙன்
மலமேவு வாயு விசர்க்கத்திற் சுத்தி மருவலெங்ஙன்
நலமேவு காழிப் பதிக்குரு நாத நவிற்றுவையே. ௮

அருந்தந்த சுத்திசெய் காட்டம் பரிக்கு மருமனுவே
திருந்திடுந் தானம தேதெத் திசைமுக மாயிருத்தல்
பொருந்திய போதினிற் காணுத தேதைப் பொருவில்சுத்தி
திருந்துமுள் ளேபுறம் போமுனஞ் செய்குதல் செப்புவையே.

செப்புமத் தந்த மெதுமுத லாச்செய்தல் சேர்வலமோ
தப்பி லிடமது வாய்ச்செய்த லோவது தான்மெள்ளவோ
வொப்பில் கடினம தாய்ச்செய்வ தோவுறைந் தோங்குசுத்தி
மெய்ப்புறச் செய்வதிங் கெத்துணை யென்ன விளம்புவையே. ௰

இட்டிகை சாம்பற் றவிர்காட்டத் தாற்செயி லேதுகுறை
விட்ட திதியி லருஞ்சுத்தி செய்யில் வினையதெங்ஙன்
திட்டென வாய்கொப் புளித்தபின் னேவது செய்யுமுன்னே
வுட்டனி நாவினைச் சோதனை செய்த லுரைத்தருளே. ௰௧

உரைத்திடு நாவழி காட்டம் பரிக்கு முயர்மனுவென்
றுரைத்தல மீதினில் வாய்சுத்தி செய்வதெத் தானமதாந்
திரைப்புனல் மேற்கொப் புளித்தா லருந்துயர் சேர்வதெங்ஙன்
வரைத்தென் விரலினிற் கீழ்மண் ணெடுத்தல் வகுத்தருளே. ௰௨

அந்தமண் ணுடல் பூசி லகனு மவலமெது
கந்த முறுந்துண்டங் கண்செவி மூடிற் கருமமெது
சிந்தையி லத்திர தெய்வங் கருதிச் சிவமனுவைச்
சந்த முறச்சொலி னீங்குவ தேதெனச் சாற்றுவையே. ௰௩

தடநீ ரதனிற் சிவதீர்த்தம் வைக்கும் தகைமையெது
திடமாக மண்ணி லொருகூறு திக்கிற் றெறிப்பதென்னே
யிடமாக மற்றொரு கூற்றினை நீர்வளைத் திட்டதெது
வுடன்மீது பூசி முழுகிடி லேதிங் குரைத்தருளே. ௰௪

சலக்கரை யேறிமெய் யீரந் துடைக்கிற் றருந்திசையென்
விலக்கிடு மீரத் துகில்கொடு நீவில் வினையதெங்ஙன்
துலக்கிடச் செய்தனின் றேவிருந் தோவத் துகில்புனைந்து
கலக்கமில் கன்மஞ் செயிற்குறை யேதெனக் காட்டுவையே. ௰௫

நியதிப்பயன் வினா ௨௧

உத்தர பூருவம் நோக்கி நியதி யுஞற்றுவதென்
சித்திர வாசன மேவி யிருக்கும் திறமதுவென்
பத்திர மானநி ரீக்கண மாதி பதித்தலென்னே
யத்திர சந்திய தேதென் றெனக்கரு ளாரியனே. ௰௬

ஆசமித் தாற்பய னேதக் காமுத் திரையதெது
நேசமுற் றேற்றக் குறைவுகொண் டாற்குறை நீடுவதென்
மாசதற் றேது மதுவடி வேது மனுமுடிவிற்
றேசதுற் றேதுஞ் சுதாவென்ப தேதெனச் செப்புவையே. ௰௭

இருக்கால் வலக்கரத தங்குட்ட மூலத் தினுலுமித
மொருக்கா லகங்கையி னுலுந் துடைக்கி லுறுபயனென்
சுருக்கா தனமிகை யங்குட்ட மேவிய தொல்விறையென்
பெருக்காத் தொடுமிடந் தொட்டத னாற்பயன் பேசுவையே.

திருநீ றெடுக்கும் பிரமாண மேது சிறந்திடக்கை
தருநீறு சுத்தி தகுவிப்ப தேது தனியுருவென்
பெருநீர்மைத் தெய்வம தேதிடுந் தானங்கள் பேணியிட்டால்
வருநேர் பலனெது வெங்குரு வாண வகுத்தருளே. ௰௯

பின்பாச மித்தத னாற்பய னேது பிறங்குமனத்
தன்பான் முழுகி லகனுவ தேதங் கணிவலக்கை
முன்போ விடக்கைபின் னேமுறை சோதனை முற்றுவதிங்
கின்பாரு மத்திரத் தாற்றுடைத் தாற்பய னேதருளே. ௨௰

மீளக்கை கூட்டிய சத்திய மந்திர மேவகைக்கும்
கோளத்தி னுற்பய னேது குறிக்கர ந்யாசமெது
நீளத்த மங்கத்தி லொன்றல வோவந்த நீவிரலிற்
கேள்சுத்த மந்திரம் வைக்குந் தகைமை கிளத்துவையே. ௨௧

அங்க ஙியாசத்தி னுற்பய னேதிங் ககவிதயந்
தங்குஞ் சிவாசன மூர்த்தி வியாபகந் தானதெங்ங
னெங்குஙி யாசமுடிவின் மகாமுத் திரையதை யெய்தியதென்
வெங்குரு மாநகர் வாழ்குரு நாத விளம்புவையே. ௨௨

பஞ்சப் பிரமத்தைப் பீசங் குறைத்துப் பகர்வதுவென்
விஞ்சச் சடங்கத்தைத் தீர்க்கம தாக விளம்புவதெ
னெஞ்சச் சொலாவவ் வுகாரத்தை யோதிடி லேதுபயன்
தஞ்சப் பதாம்புய தென்காழிக் கண்ணுடைச் சம்பந்தனே.

பேசும் பிரணவஞ் சங்கிதை யாற்பிராணு யாமமெது
மூசும் வளியை யிரேசக பூரக முற்றுவதென்
வீசுமச் சத்தப் பொருளே தகங்கை விரித்துவலத்
தாசகல் சத்தச் செவிவைப்ப தேதென் றறைந்தருளே. ௨௪

பூரக கும்பக ரேசக மோவலம் பொங்கியெழு
மிரேசக பூரக கும்பக மோவியன் மாத்திரையோ
தோரக முத்தம மத்திம மீறென் றுரைப்பதென்னே
தாரக மான தமிழ்க்காழிக் கண்ணுடைச் சம்பந்தனே. ௨௫

சந்தித் தியானஞ் செயிலுள்ள நீங்கிற் றவறதெங்ஙன்
வந்திக்கு நால்வர் வழுத்தும் வடிவு மொருவடிவோ
சிந்தித்த தாற்பய னேது செழுங்கும்ப முத்திரைநீர்
முந்தித் தலையிற் றெளித்திட லேது மொழிந்தருளே. ௨௬

மிகமார்ச் சனஞ்செய்த தாற்பய னேது விளங்கியிடு
மகமா மருடனத் தாற்பய னேதது வன்றிமுன்போற்
சுகமான வாச மனுதி ஙியாசந் தொகுத்ததென்னே
சகமீது ளோர்புகழ் கண்ணுடைச் சம்பந்த சாற்றுவையே. ௨௭

அங்கையி னுற்சல மள்ளித் தனேச்சுற்றி லாம்பயனென்
சங்கையி னீர்செங்கை வாரித்தர்ப் பிக்கிற் றரும்பலனே
தெங்குஞ் சொலுமந் திரங்கள் சுவாக சுதநமவென்
தங்கும் வஷடும் வவுஷடு மேதெனச் சாற்றுவையே. ௨௮

சாற்றும் படந்தமு மந்தம தேதைத் தருமருளாற்
போற்றி நியதி முடித்துக் கரைவந்து பூருவத்திற்
றேற்று மிரவி நமஸ்கார மேதெனச் சொல்லிடுவாய்
தேற்றும் பொருள்தரும் சிகாழிக் கண்ணுடைத் தேசிகனே.

நியதிப்பயன் வினா முற்றும்

## நியதிப்பயன் விடை

மந்திர மென்னு மெழுத்தினில் மவ்வென்ற வான்பொருளா
மந்திர மான திரமென்ற லப்பொரு ளாலுயிர்க
ளுந்து பிறவிக் கடனின்று மேற்றுகை யோகையொடுந்
தந்திர மீதினிற் கண்டுகொள் மந்திரச் சார்பினையே. ௩௰

குருவென்ற சத்தப் பொருளே தெனிலதிற் குவ்வென்னமுன்
றருமந்த காரம தாகிய மும்மலஞ் சாற்றுசத்தி
யுருவெஃகு மம்மலம் போக்குகை யாற்சகத் தோதிடுவர்
கருவந்த போதங்க ளீங்கிய மாணவ கண்டுகொள்ளே. ௩௧

சிவதீக்கை யென்னும் பொருளே தெனிலதிற் றீயெனல்முன்
அவநீக் கியசிவ ஞானமுண் டாக்குகை யந்தமதிற்
பவநீக் கியவிக்கை யாருயிர் மும்மலம் பாற்றியிடல்
தவநீக் கியவுப தேசம தென்பதுஞ் சாற்றுதுமே. ௩௨

உவ்வென்ற சத்த மனுக்ரக மாமென் றுரைக்குமினிப்
பவ்வென்றல் பாவத்தை நாசம தாக்கும் பரிவினுடன்
தெவ்வென்ற தேயருள் சேர்விக்குஞ் சவ்வென்ற தீர்க்குமல
மவ்வென்ற லேணைய தோடங்கள் போக்கும் வரமுறவே. ௩௩

காலத்தி லாரிய னேமுதல் நால்வர் கருதுவது
சீலச் சிவோகம் பரவிந்து நாத தரிசனம்பின்
கோலச் சதாசிவ னேடங் குருத்திர னுக்குறிக்கும்
மேலைச் சிரம்நெற்றி மார்பினு மென்று விதித்திடுமே. ௩௪

பதியதற் குத்தரம் பூருவ மாகும் பகரிடைதான்
விதிதரு மீர்சத விற்கிடை போகன் மிகுமிருளி
னதிமுக மாகிரு தித்திசை யாகத் தயருறினும்
பொதிதரு நோக்கிற் பிணியினும் மேலும் புகலுதுமே. ௩௫

(தொடரும்)

# இளையான்குடிமாற நாயனார் நாடகம்

[ஆசிரியர் அ. வரத நஞ்சைய பிள்ளை, ஜலகண்டபுரம்]

## அங்கம் I

பாத்திரங்கள்:—சூத்திரதார், விதூஷகர், நடி.

(சூத்திரதார் பிரவேசித்தல்)

பாடுதல்

'நாமனவினி வினவய்யா' என்ற கிருதி மெட்டு.

பல்லவி

நீ தயவுசெய் தருளையா
நீலமேனி யுமைபங் காள (நீத)

அநுபல்லவி

வேதகீத போதனீ யென்று
மெத்தவுமுனை நத்தினே னின்று (நீத)

சரணம்

துன்பேதரும் வினை நீக்கித்
துதித்துன்கழலில் அன்பு தேக்கி
இன்பேறுகர் வாழ்வுண் டாக்கி
ஏழையேனுமீ டேறக் கண்ணோக்கி (நீத)

இன்று இங்குக் கூடியிருக்கும் சபையோர்களைச் சிவாநந்தாநுபவத்தில் திளைக்கச் செய்வது என்கடனும், நமது வாழ்நாட்களில் நேரும் விசித்திரமான இன்ப துன்பக் கோர்வைகளுக்குச் சிறிதும் அசையாமல் என்றும் மகிழ்ச்சியையே பெற்றுச் சுகிப்பதற்கு ஏற்பட்டுள்ள மார்க்கங்களில் பக்தி மார்க்கமே மிகச் சிறப்புற்றது. எது வந்தாலும் எது போனாலும் பிடித்த நற்கொள்கையை விடாது சாதித்துப் பேறுபெற்ற அடியவர்களின் சரித்திரங்களைக் கற்றலினும் கேட்டலினும் போது போக்குவதுதான் பிறவியின் பெரும்பயனாகும். என் துணைவ-

ராக இருந்து நகைச்சுவை நிரம்ப நடாத்தும் விதூஷகரும் அதோ வருகிறார்.

(விதூஷகன் தோன்றல்)

சூத்திரதார் : என் அன்பரே! வருக! வருக!!

விதூஷகன் : எனதன்புக் கோர்கொழு கொம்பரே வாருங்கள்! வந்தனம் செய்கின்றேன்.

சூத்திரதார் : உயிர்க்கினியீர்! நாம் இவ்வரங்கத்திற் கூடியுள்ள கனதனவான்களை மகிழ்விக்க இன்று இளையான்குடி மாற நாயனார் சரித்திரத்தை நடாத்தக் கருதியிருப்ப தால், அதன் முன்னர் உலகத்தையும் நமது வாழ்க்கை நிலையையும் பற்றிச் சற்று ஆலோசிக்கலாமென்று தோன்றுகிறது. உமது அபிப்பிராயம் யாது?

விதூஷகன்: ஆம், அதுவும் வேண்டியதே! உத்தமமான பக்தர் களின் சரித்திரம் செவி வழியாகவும் நடிக்கும் காட்சியால் விழி வழியாகவும் அவர்கள் மனத்திற் குட் செல்லுமுன் அம்மனத்தில் முன் நிறைந்துள்ள அசுத்தங்களாகிய காமம் குரோத முதலிய குணங் களை வெருட்டி ஒட்டி விடவேண்டியது நன்றே. எங்கே கொஞ்சம் ஆரம்பியுங்கள்.

(சூத்திரதார் பாடுதல்)

ஆசிரிய விருத்தம்

காலனென் றொருபாவி ஓயாமல் வாழ்நாள்
கவர்ந்துகொண் டோடுகின்றான்
கட்டிளமை பையவே நீங்கிவிட முதுமையும்
கடுகியே தோன்று தொடர்பால்
மேலெய்து மரணம் நமை நோக்கியே தவறாமல்
வேகமாய் வருவ தையோ!
வியாகூல மின்றியே யென்றும் வாழ்வோமென்
விரும்பி நம்போ லிருந்தார்

சாலவே நாடொறு மிறந்து சுடுகாட்டிடைச்
சாம்பராவதும் நோக்குவோம்.
சற்றேனு மிதனையெண் ணுமலே வீணிற்
சதாகால முங்கழிக்கப்
பாலரோ நாமறிவி லாதமிரு கங்களோ
பாரிலுட லுள்ளபொழுதே
பராபரனை நாடியருள் கூடாமை மிகுதியும்
பரிதாப கரமானதே.

நடி : (தோன்றுகின்ருள்) சைவம் வளர்க்கும் நாடகப் புல வர்களே ! அடியாள் வணங்குகின்றேன்.

சூத்திரதார் : மயில்போன்ற சாயற் குயின்மொழி மாது ! எங்கே ? நின் அருமை வாக்கினல் உலக நிலையாமை யைச் சுட்டி ஒரு பாட்டு; மகிழவேண்டும் நான் கேட்டு.

நடி : அப்படியே. (பாடுகின்ருள்)

நகுமோமு கனலேனி என்ற வர்னமெட்டு

பல்லவி

நிலையாமை உருவாகி நேர்மேவும் நிலையை
நினைவாரிலை ஒகோ மானிடர் பலரே

அநுபல்லவி

வலியோர்கள் முதியோர்கள் சிறுபால ரெனவே
மதியாதுயிரே தாதா வென நேரே
மரணந்தனி வாயிட (நிலையா)

சரணங்கள்

பொருளாளர் வறியோராய் எளியோர்கள் தனமே
பொலி வாழ்வுடனே சிலநாள் மகிழ்வா யுறுவாரே
உருமேவும் அழகான வுடல்கூடும் இளமைகெட
உறுமாநரைமுதிர் கிழமாய்வரு மிகழ்தரலாலே
பல சஞ்சல மேவிட (நிலை)

சூத்திரதார் : பிரியமுள்ள நடி ! உண்மையில் உலக நிகழ்ச்சிகள் விசித்திர மாறுதல்களைக் கொண்டவைகளே ! இது பற்றியே நமது பட்டினத்தடிகளும் "தோன்றின மறையும் மறைந்தன தோன்றும், சிறுத்தன பெருக்கும் பெருத்தன சிறுக்கும்" என்று அருளியுள்ளார். இவ்வகை மாறுதல்களைக் குறித்துக் கவலைப் படாமலிருப்பதற்குத் தக்க உபாயம் என்னை ? அதைப்பற்றியும் ஒரு பாட்டுத் தேவை ?

நடி : தங்கள் கட்டளையின் வண்ணமே.

(பாடுதல்)

இராகம் பியாகு—தாளம் ஆதி

பல்லவி

வீணேன் கலக்கப் படவேண்டும்—நாம்
வீணேன் கலக்கப்பட வேண்டும்.

அநுபல்லவி

காணாத தல்லபல நாளுங் கண்டதுவே
ஊணா மின்பதுன்பம் உயிர்கட்கெல்லாம் பொதுவே (வீணே)

சரணங்கள்

1. வருவ தொருக்கா லும்போ காது—நம்மை
வந்தடையாததும்வ ராது
பெருகிய ஆசை எனும் தீது—பற்றிப்
பேய்போலலையக் கணக் கேது
உருவமெடுத்த வினைப்பயனெப்போது
முண்டே தொலைக்காமல் விண்டேக மாட்டாது. (வீணே)

2, உரலில் தலையை வைத்துக் கொண்டு—பின்
உலக்கைக் கஞ்சுவதென்ன கண்டு
பெரியோர் உலகநிலை விண்டு—மேலே
பிறவாமை வேண்டினர்கள் பண்டு
கரவில்லா வுள்ளம் சிதறாமலே தொண்டு
கர்த்தாவை நோக்கிச்செய்தத்தால் பலனுண்டு. (வீணே

3. நம்மினும் தாழ்ந்தோரை　நோக்கிச்—சுகம்
நம்மதே யென்று துயர்　போக்கி
நம்மினுயர்ந்தோரைச் சீர்　தூக்கி—கர்வம்
நாணும்படி யதையும்　போக்கி
எம்மையன் பாதத்தி லேயன்பினைத் தேக்கி
ஈடேற மாட்டாமல் கேடு மிகவுண்டாக்கி.　(வீணே)

4. பஞ்சாக்கரமுளது　பேச—நல்ல
பால்வெண்ணீறுண்டு மேலே　பூச
அஞ்சாது மும்மலமாம்　பாச—மற
ஐயனருளுண்டடியர்　நேச
மெஞ்சாச் சரித்திரங்க ளெத்தனையுண் டுல்லாச
மீதெல்லாம் விட்டுவிட்டுப் பேதையரெல்லா மேச.　(வீ)

சூத்திரதார்: நடீ! நீ கூறுவது மிகவும் சரி. கவலையையே நினைத்தால் அதனையே மனம் மிகுவிக்கிறது. கவலை நேர்ந்தபோதுங் கூட மகிழ்வுண்டாக்கத் தக்க எண்ணங்களை எண்ணினால் சந்தோஷமே உண்டாகின்றது. துன்பம் தொடங்கும்போதே அதை இன்பமென மாற்றி நினைக்கும் மனத்திட்ப மிருக்குமானால் இறக்கும் வரையிலும் நாம் இன்பத்தையே அனுபவிக்கத் தடையிராது. துக்கத்தின் பூரண உருவமும் நாம் இச்சித்திருக்கும் பொருட்கள் கேடுறுவதனாலோ அடையாமற் போவதனாலோ தோன்றுகின்றது. ஆனதுபற்றி எல்லாப் பொருட்களினிடத்தும் ஆழ்ந்த காதலை அல்லது அபிமானத்தைக் கொள்ளாதிருப்பதும் துன்பத்தை விலக்கும் சிறந்த கருவிகளுள் ஒன்றாகும். நாம் விரும்புகின்ற பொருட்களும் அவற்றை அடைந்து சுகிக்க நிற்கும் நாமும் அநித்தியமாக இருப்பதனால் துக்கம் நம்மோடு எப்போதும் தடையறப்பழகி வருகின்றது. நமது மனம் வாயுவின் கூற்றால் அமைக்கப்பட்டதென்று தத்துவ சாஸ்திரிகள் கண்டிருக்கிறார்கள். ஆகையால் அது எப்போதும்

சலித்துக்கொண்டிருக்கும் இயல்பையுடையதென்று தெரிகின்றது. அதனைத் தன் போக்கில் விட்டுவிட்டால் பல்லாயிரங் குரங்குகளின் சேட்டையைத் தொடங்கிவிடும். இம்மனத்திற்கு நிலையாக ஒரு பொருளைச் சிந்தித்துக்கொண்டிருக்கும் பழக்கத்தை நாளடைவிற் பழக்குவது நன்று. அச்சிந்தனைப் பொருளும் அழிவுறும் பொருட்களாக இருந்தால் துன்பம் பெருக்குமாதலால் என்றும் அழிவற்ற நிலையுடைய பொருளையே நினைக்கச் செய்வோமானல் இன்ப வாழ்க்கையில் வாழலாமென்பது ஒருதலை. ஆகவே நித்தியனும் சர்வக்ஞனுமான பெருங்கருணைப் பெருமான் பொன்னடிகளில் மனதைச் செலுத்தி அறிவாளர்கள் உலக சுகத்தினும் பன்மடங்குயர்ந்த பரமானந்தத்தை அநுபவித்து வாழ முயல்கின்றார்கள். இறைவன் திருவிளையாடலையும் அவனடியார்களின் அன்பு முதிர்ந்த அற்புத சரித்திரங்களையும் சிந்தித்துக்கொண்டும் காலங்கள் அவ்வப்போது குறிப்பிடுகின்ற நற்கடமைகளைப் பரோபகாரமாகப் புரிந்துகொண்டும் நம் வாழ்நாளின் முடிந்த எல்லையை அணுகுவதே நமது நோக்கமாகும். பெண்ணரசி! இன்று இவ்வரங்கில் நிகழவிருக்கும் இளையான்குடிமாறர் சரித்திரத்தை நீ அறிவாயன்றோ? அச்சரித்திர சுருக்க சாரத்தை முன்னதாகக் கூறிவிட்டால் பின் நாடகமினிது தொடங்கலாம். எங்கே! உன்குரலின் இனிமை சங்கீத இனிமையோடு கலந்து வெளிப்படட்டும்.

நடி : அவ்வண்ணமே யாகுக.

(பாடுகின்றாள்)

இ-ம். ஸ்ரீராகம்— தாளம் ரூபகம்

பல்லவி

இளையான்குடி மாறநாயனர்—சிவன்
இணையடிக் கடியார்க்கு நேயனர்

---

அநுபல்லவி

களையோடு பசித்துவந் தோர்க்கன்னம்
கருத்துடனே-இருத்திமனம்-அருத்திபெற-அருத்தியகம்
(இளை)

சரணங்கள்

1. செல்வஞ் செருக்கிப் பொலிந்திட்ட காலையில்
செய்ததுபோலே வறுமைகொள் வேலையும்
ஒல்லும் வகையால் விருந்திடும் உள்ளத்தார்
உத்தமராம்-அத்தனடிப் பத்தரையே நத்திய நம் (இளை)

2. தாங்கள் பசித்துப் பொசிப்பொழிந்தே யுள்ள
தருணத்தில் ஈசன் பசிப்பிணியால் மெள்ளத்
தாங்கும் முதிய அடியர் கோலங்கொள்ளத்
தடவிவழி-யிடறிவயற்-கிடுமுளையை-இடவிலிடும் (இளை)

3. வீட்டின் அலகை விறகுக்காய றுத்து
மேவுங் குழிக்கீரை யேகறி குறித்து
வாட்டந்தீர வுண்ண வாருமென் றழைத்து
மனநிறையுங்-கனிவுடனே-யரனடியை-இனிதடையும்
(இளை)

சூத்திரதார் : விதூஷகரே ! வாரும், இளையான்குடிமாறர் பெருமையைப் பாராட்டி இந்நாளை நன்னாளாக்குவோம். தாங்கள் உடனிருந்து வழக்கப்படி நடாத்த வேண்டுமெனக் கேட்டுக் கொள்ளுகின்றேன்.

விதூஷகர் : நன்று நன்று. அறியாமையும் திரிபுணர்ச்சியும் பரவிவருகின்ற இக்காலத்தில் உண்மையாகவே நடந்த சரித்திரங்கள் என ஆராய்வோர்கள் ஒப்புக்கொண்டிருக்கும் பெரிய புராணச் சரித்திரங்களுள் ஒன்றாகிய இச்சரிதத்தை சைவ வுலகம் மகிழ்வோடேற்குமாறு நாடக முறையில் நடாத்த முன்வந்த தங்கள் அடியனேன், அதாவது பாதத்தைப் போன்றவன் நான். ஆதலால் உங்கள் விருப்பப்படி நடக்க வேண்டியவனே. நீங்கள் நடத்தியவாறு நடக்கின்றேன்.

(எல்லோரும் போதல்)

## அங்கம் I

### காட்சி I

இடம்:—அரண்மனையில் தனித்த இடம்.

பாத்திரங்கள்:—இளையான்குடிமாறர், நகைமுகவல்லி, மனோன் மணி, சில பணிப்பெண்கள்.

(இளையான்குடிமாறர் தோன்றுதல்)

இராகம் ஆனந்த பைரவி—தாளம் ஆதி

பல்லவி

நாதா நினது பதமே—நினைந்துருக
நீதா வாஞ் சந்ததமே நனவொடு கனவிலும்

அநுபல்லவி

வேதா வணங்குமறைப் போதா புவனங்களுக்
காதாரமாக நின்ற தாதாவும் நீ யலையோ. (நாதா)

சரணங்கள்

காட்டி மறையுமின்பம் மூட்டி வருத்தமிக
வாட்டியலைக்கும் வினை ஓட்டி இனிமேலேனும்
கருத்தொருமித் தொருநிலைபெற
நிறுத்தியுளத் தினில்மயலற
விலக்கிவிருப் பொடுநினைகிற
குறிப்பின்வழிப் புலனணைவுறு
கனிவொடு விழிபுனல் பெருகிட முழுமெயும்
எழுகிற புளகமொட வசமுமடைதர (நாதா)

(தனக்குள் கருதுகின்றார்) பலவகையாலும் பாடுபட்டு இச்சரீர போஷணைக்காகவே போதெல்லாம் கழிக்கப்படுகின்றன. பெற்றோர், மனைவி, மக்கள், சுற்றத்தார் என்னும் உயிர்ச் சார்புகளிலும், விளைநிலம் பொன் முதலிய பொருட்சார்புகளிலும் பற்றுச் செய்து நமது என அபிமானிக்கின்றோம். நமது வாழ்க்கையில் முற்றிலும் இன்பத்தையே விரும்பித் துன்பத்தை வெறுத்து நிற்கின்றோம். நாமே மேம்படப் பிறரெல்லோரும் வணங்கி நம் வழிப்பட நன்கு மதிப்புப்பெற வேண்டுமென்பதும் நம் நோக்கம். நம் உயர்வு கருதிய எண்ணங்களே கணந்தோறும் நம் உள்ளத்தில் உதிக்கின்றன. நமது முயற்சி

பொன்றினாலேயே எல்லாம் நிறைவேற்றப்படுகின்றதென்றும் ஒரு கருத்துக்கொண்டிருக்கிறோம். இவ்வாறு கொள்ளும் கோட்பாடுகள் சரிதானோ என்று கவனிப்பவர் மிகவும் அரியர். இளமை, காளைப்பருவம், முதுமை முதலிய உடலின் இயற்கை மாறுதல்களை நாட்குநாளடைந்து கடைசியில் இவ்வுடம்பு பிணமாய் வீழ்கின்றது. நாம் இருக்க நமது விருப்பப்பொருட்கள் கேடுற்றாலும், அன்றி அப்பொருட்களை விட்டு நாமே இறக்க நேரினும் துன்பமே துணையாகின்றது. நம்மைப்போலவே எல்லா வுயிர்களும் தத்தம் சுயநலத்தையே பெரிதும் காதலிக்கின்றன. எண்ணி முயன்ற கருமங்கள் முடிவுறாமற்போவதும், எண்ணியதற்கெதிராக முடிவதும், எண்ணி முயலாதிருப்பவை தாமே வந்து பொருந்துவதும் நமது அநுபவத்தில் பல தடவை காணப்படுகின்றவைகள். இவற்றைக் கூர்த்த அறிவினால் நன்கு கவனித்தால் இப்பிரபஞ்சத்தை நடத்தும் தலைவன் ஒருவன் உளன்; அவனது ஆணை வழி ஒரு நியமனத்தால் உயிர்கள் தத்தம் செய்கைக்கேற்ற பலன்களை அடைந்து வருகின்றன; வறையறுக்கப்பெற்றுள்ள வாழ்நாட்கள் முடிந்தவுடன் உயிர்க்கும் உடம்பிற்குமுள்ள சேர்க்கை விடுபட்டு உலகப் பொருட்களின் தொடர்பும் அற்றுப் போகின்றது என்னும் உண்மைகள் புலனாகின்றன. உயிர் அழியாப்பொருள் என்பர். ஆதலின் இவ்வுடலைவிட்டு நீங்கிய பின்னர் அது யாதேனும் ஓர் நிலைமையை அடைந்தே யாகவேண்டும். சிற்றறிவுடைய இவ்வுயிர்களைத் தகுதியாகிய நிலைமைகளில் சேர்ப்பிப்பது கடவுளின் கருணைச் செய்கையே யாகின்றது. ஊண், உறக்கம், போகம் முதலியவற்றால் நமக்கும் மிருகங்களுக்கும் வேறுபாடு காணோம். பகுத்தறிவுடைய மனிதன் எவ்வகையால் தான் மிருகத்திலும் உயர்ந்தவனென்று காட்டுவான்? அவன் தன்னைப் பற்றியும் இவ்வுலகத்தைப்பற்றியும் தத்துவ ஆராய்ச்சி செய்தும் தன்னைச் சூழ்ந்துள்ள துன்பங்களை மேலும் மேலும் பெருகாவண்ணம் தடுத்தும் வருந்துன்பங்களைப் போராடி வென்றும், என்றும் மனமகிழ்ச்சியைத் தேடிக்கொள்வதுதான் அவன் பெற்ற அறிவிற்குப் பயனும் பெருமையும் ஆகும். (தொடரும்)

# சேக்கிழார்

[திரு. C. M. இராமச்சந்திரஞ் செட்டியாரவர்கள்]

(சிலம்பு ௧, பரல் ௧, பக்கம் ௬௯)

## iii. சுவாமிகளின் பட்டப் பெயர்

சுவாமிகளுக்கு உத்தம சோழப் பல்லவராயர் என்ற பட்டம் சோழனால் கொடுக்கப்பெற்றது எனப் புராணங் கூறுகின்றது. அக்காலத்தில் பட்டங்கள் ஒரு 'அரசனுடைய பெயரை முன்னிட்டு வைப்பது வழக்கம். உத்தம சோழன் என்பான் கண்டராதித்தருடைய மகன்; முதல் இராஜராஜருக்கு முந்தி ஆண்டவன். 969—985 (கி. பி.) யில் ஆண்டவன் அவனுக்கு மதுராந்தகன் என்ற மறுபெயருண்டு. வெகு பராக்கிரமத்துடன் ஆண்டவன். ஆகையால் அவன் பெயரால் பல பட்டங்களைக் காணுகிறோம். உதாரணமாக,

1. உத்தம சோழ மலாடுடையார்.
2. உத்தம சோழ கங்காதிராயன்.
3. உத்தம சோழ மூவேந்த வேளான்.
4. உத்தம சோழ பிரமாதிராய கன்மி.
5. உத்தம சோழ பேரரையன்.
6. உத்தம சோழ நாடாள்வான்.
7. உத்தம சோழ பல்லவரையன்.

இவையேயன்றி உத்தம சோழப் பெயர் கொண்ட ஊர்கள், நாடுகள், மக்கள் முதலியன பலவுள. இப்பெயர்களில் உத்தம சோழ பல்லவராயன் என்ற பெயரை ஒரு பிரபு அணிந்திருந்தார் என்றும் அவர் மகள் முத்தூர் பெரிய நாச்சியார் ஆலயத்திற்கு நந்தா தீபம் வைக்க பணம் தானம் செய்தார் என்றும் கோவை ஜில்லா முத்தூர்* (165—10) கி. பி. 1211

* இம்முத்தூர் சாசனத்தில் கண்ட வீரராஜேந்திரனை (கி. பி. 1067 முதல் 1070 வரை ஆண்ட சோழ மன்னனைக் கொண்டு உத்தம சோழப்பல்லவர் மகன் சிக்கனை அரங்கநாயன் அம்மன்னன் காலத்

ஆண்டின் சாசனம் ஒன்று கூறுகின்றது. ஆகவே சேக்கிழாருக்குப் பின் சில ஆண்டுகளுக்குள்ளாக இப்பட்டப் பெயரையே ஒருவர் இயற்பெயராக வைத்துக் கொண்டதாகத் தெரிகிறது.

### iv. சுவாமிகள் தம்பியார்

சுவாமிகளுடைய தம்பியாரின் பெயர் பாலறுவாயர் என்றும் அவரும் அமைச்சரானர் என்றும் அவருக்கு தொண்டைமான் என்ற பட்டம் கிடைத்ததென்றும் முன்னமே கண்டோம். பாலறுவாயர் என்ற பெயர் காணும் அடியிற்கண்ட சாசனங்கள் கிடைக்கின்றன.

1. சேக்கிழார் பாலறுவாயர் களப்பாளராயர்—கோட்டூர் கொழுந்தீசர் ஆலயத்துக் குலோத்துங்கன் III காலத்து கல்வெட்டு. இவரே ஆசாரியர் தம்பியாக இருக்கலாம் என்று ஊகிக்கின்றனர் என்று முன்னமே குறித்துள்ளோம்.

2. கொற்றமங்கலத்துப் பாலறுவாயர்—தஞ்சை ஜில்லா திருப்பாம்புரத்துச் சாசனத்தில் (தஞ். 818) புகலாபரணர் ஆலயத்தை இவர் கட்டினவர் என்று காணப்படுகிறது. மேலும் கீழுமுள்ள கல்வெட்டுகளை ஆராயின் இக்கல்வெட்டு குலோத்துங்கன் III ஆக இருக்கலாம்.

---

தில் அரசாங்க உத்தியோகத்தில் இருக்க உத்தம சோழப்பல்லவனை சேக்கிழார் குலோத்துங்கன் II (1146-1178) காலத்தில் இருக்கமுடியும் என்பது பாட்டன் திருமணத்தில் பேரன் தாம்பூலம் வழங்கினன் என்ற கதை போலாம் என்று சோமசுந்தர தேசிகர் தம் சைவசிகாமணிகள் இருவர் என்ற நூலில் கூறுகிறார். முத்தூர் என்பது கொங்கு நாட்டில் ஓர் ஊர். இதில் கண்ட வீரராஜன் 1207-1252 ஆண்ட கொங்கு சோழன். முத்தூர் ஒரு சிறிய ஊர்தான்; அதன் காவலன் சோழனல் கொடுக்கப்பெற்ற ஒரு பட்டம்பெற்ற ஒரு தலைவனே அன்றி சேக்கிழாருக்குச் சம்பந்தப்பட்டவனல்ல. மேலும் சைவ சிகாமணியாகிய சேக்கிழார் தன் மகனுக்கு சிங்கன் அரங்கநாயன் என்று பெயரிட மாட்டார். இக்கொங்கு நாட்டில் பல்லவராயன் என்ற பட்டம்பெற்ற பழைய குடிமக்கள் இன்னமும் இருக்கிறார்கள். ஆகவே தேசிகருடைய முடிவு மறுமுறை ஆராயத்தக்கது என்று தோன்றுகிறது.

3. திருத்துறைப்பூண்டி பாலறுவாயர்—திருத்துறைப் பூண்டி ஆலயத்து இராஜராஜ தேவர் III காலத்து சாசனம் (1538 தஞ்.) திருத்துறைப்பூண்டியில் பாலறுவாயர் என்ற ஒரு சிவபக்தர் செல்வத் திருவாரூரில் ஒரு செங்கல் மடம் கட்ட நிலம் வாங்கினதைக் குறிக்கிறது. காலத்தைக் கவனிக்குமிடத்து சேக்கிழாருடைய தம்பியாரே மேல் 2, 3 ல் கண்ட செய்கைகளையும் செய்திருக்கலாம் என்றும் ஊகிக்கப் பெறுகிறது.

இனி இவருக்குத் தந்த பட்டப் பெயரான தொண்டைமான் என்பதைக் குறித்து விசாரிக்கலாம். இதற்கு தொண்டை நாட்டுத் தலைவன் என்ற பொருள் கொள்ளலாம். ஆதி காலத்திலே தொண்டைமான் இளந்திரையன் என்ற ஒருவன் இருந்ததாகக் கதை உண்டு. பிறகு குலோத்துங்கச் சோழன் I கலிங்கத்தை வெல்ல அனுப்பின சேனைத் தலைவனுக்கு கருணாகரத் தொண்டைமான் என்ற பெயர் இருந்ததாக கலிங்கத்துப் பரணியினால் அறிகிறோம். அடியிற் குறிக்கும் கல்வெட்டுகளினாலும் சோழர்கள் தங்கள் உத்தியோகத்தர்களுக்கு தொண்டைமான் என்ற பட்டம் அளிப்பது வழக்கம் எனத் தெரிகிறது. அவைகளில் சில இங்கு குறிப்போம்.

1. குலோத்துங்கச் சோழன் II-ன் 12-ம் ஆண்டு 293-ம் நாளில் மூன்று காரியங்கள் நடைபெற்றன. அக்காலத்து திருமந்திர ஓலை அநபாய மூவேந்த வேளான் என்பான். களத்தூர் மூன் குடுமி ஈசுவர் ஆலயத்துக் கல்வெட்டில் (44 செங்.) அரசன் தொண்டைமானுக்கு உத்தரவளித்து களத்தூருக்கு சுற்றிலுமுள்ள நிலங்களை தானம் செய்து குலோத்துங்கச் சோழன் திருத்தொண்டத் தொகை நல்லூர் எனப் பெயரிடச் சொன்னது கண்டிருக்கிறது.

2. மேலும் திருவானக் கோயில் (578 செங்.) திருவாலீசுவர் ஆலயத்துக் கல்வெட்டில் அதே தேதியில் சில நிலங்களைச் சேர்த்து அநபாய நல்லூர் எனப் பெயரிட்டதாகத் தெரிகிறது.

3. மற்றும் அதே தேதியில் (582 செங்.) நென்மலி கிராமத்தில் சில நிலங்களைச் சேர்த்து குலோத்துங்கச் சோழன் திருநீற்றுச் சோழ நல்லூர் எனப் பெயரிட தொண்டைமானுக்கு உத்தரவளித்ததாகக் கூறுகிறது.

ஆகவே இம்மூன்று கல்வெட்டுகளினாலும் தொண்டைமானும், அநபாய மூவேந்த வேளானும் குலோத்துங்கன் II சோழனுடைய அமைச்சர்களாக இருந்தார்கள் என்று தெரிகிறது. ஒரே நாளில் தொண்டைமானுக்கு உத்தரவு அளித்து,

1. குலோத்துங்கச் சோழன் திருத்தொண்டத் தொகை நல்லூர்.

2. அநபாய நல்லூர்.

3. குலோத்துங்கச் சோழன் திருநீற்றுச் சோழ நல்லூர் என்ற ஊர்களை ஏற்படுத்தினார்கள் என்றும் தெரிகிறது. ஆகவே இக் குலோத்துங்கனுக்கே அநபாயன், திருநீற்றுச் சோழர் என்ற பெயர்கள் இருந்திருக்க வேண்டும் என்று ஊகிக்கலாம். அமைச்சன் பெயரும் அநபாயனாக இருத்தலைக் காண்க. ஆகவே தொண்டைமான் என்ற அமைச்சர் சேக்கிழாருடைய தம்பியாராக இருத்தல் வேண்டும்.

4. மேலும் சிதம்பரத்துச் சாசனங்கள் மூன்றில் தொண்டைமான் என்பாரின் பெயர் காணப்படுகின்றன. (தென். ஆ. 74) என்ற சாசனத்தில் தொண்டைமான் உத்தரவுப்படி தாளவிநோத நல்லூர் பூமிகளை ஒரு நந்த வனத்திற்குக் கொடுக்கப்பட்டது. இது விக்கிரம சோழன் திருமாளிகையின் சுவரில் எழுதப்பட்டது. இதனால் விக்கிரம சோழனுக்குப் பிறகு வந்த குலோத்துங்கன் II காலத்திற்குப் பிறகு தான் ஏற்பட்டிருக்க வேண்டும் என்பது தெளிவு.

5. தென். ஆறு 75 என்ற கல்வெட்டில் இராஜராஜ தேவன் 3-ம் ஆண்டு 115 ம் நாள் தொண்டைமான் உத்தரவுப்படி தானம் எழுதப்பட்டது. அப்போது திருமந்திர ஓலை மீனவன் மூவேந்த வேளான்.

6. தென் ஆறு 76 என்றதில் குலோத்துங்கன் III காலத்

தில் தொண்டைமான் என்ற உத்தியோகஸ்தன் இருந்தான் என்று கண்டிருக்கிறது. ஆகவே குலோத்துங்கன் II முதல் கொண்டு தொண்டைமான் என்ற பட்டப் பெயருடன் ஒரு உத்தியோகம் இருந்தது எனத் தெரிகிறது.

7. தென். ஆறு 81 படி சுந்தரபாண்டியன் (1251—64) காலத்திலும் ஒரு தொண்டைமான் இருந்தான்.

8. திருச்சி 81-ல் குலோத்துங்கன் III காலத்தில் ஒரு தொண்டைமானும் மீனவன் மூவேந்த வேளானும் அமைச்சர் களாக இருந்தார்கள்.

9. திருச்சி 589-ன்படி ஒரு தொண்டைமான் உத்தரவுப் படி பூதானம் செய்தது அறிகிறோம். ஆகவே குலோத்துங் கன் II காலம் முதல் இருந்த தொண்டைமான் குலோத்துங் கன் III காலம் வரை தொழிலில் இருந்திருக்க வேண்டும் என் றும் ஊகிக்க முடியும்.

## v. சுவாமிகள் காலத்து அரசன்

சுவாமிகள் சோழ நாட்டைப்பற்றி கூறும் இடங்களிலெல் லாம் சோழமன்னனை அநபாயன் என்றே கூறியிருக்கிறார். அச்சொல் முக்கிய சொல்லாகவும் அதற்கு சில அடைமொழி களை அங்கங்கே வைத்தும் குறித்திருக்கின்றார். அவ்விதம் பதினொரு இடங்களில் பெரிய புராணத்தில் சொல்லி இருக் கின்றார். ஆகவே அவர் காலத்தரசன் அநபாயன் என்ற பெயருடையவன் என்பதில் ஐயமில்லை. அவை வருமாறு:—

1. வெண் குடை யநபாயன் செய்ய கோல்பயன் திரு மனத் தோங்கும்—திருமலை 12.

2. பொதுக்கடிந் தினிதுகாக்குங் கொற்ற வநபாயன் (—நாடு 35.)

3. மன்னுசி ரநபாயன் வழிமுதல் (—நகர 13.)

4. சென்னி வெண்குடை நீ டநபாயன் திருக்குலம் (—இயற்பகை 1.)

5. பொன்மலை.........மன்னிய வநபாயன் சீர்மரபின் (—எறிபத்த 2.)

6. சென்னி யபயன் குலோத்துங்கச் சோழன் றில்லைத் திருவெல்லை பொன்னின் மயமாக்கிய வளவர் போரேறென்றும் புவிகாக்கும் மன்னர் பெருமான் அநபாயன் (—சண்டேசர் 8.)

7. வையம் புரக்கும் தனிச் செங்கோல் வளவர் (—நமிநந்தி 1.)

8. மன்னு திருத்தில்லை நகர்மணி வீதி யணிவிளக்கும் சென்னி நீ டநபாயன் (—புகழ்ச் சோழன் 8.)

இந்த மேற்கோள்களைக் கவனிக்கும்போது அநபாயன் என்ற பெயர் சிறப்பாகவும், அபயன், சென்னி, குலோத்துங்கன், தில்லைத் திருவெல்லை பொன்னின் மயமாக்கியவன், வளவர், முதலிய பெயர்கள் அடைமொழிகளாகவும் காணப்படுகின்றன. இவைகளுக்கு கல்வெட்டுகளிலிருந்து ஆதாரம் கிடைக்கிறதா என்று இனி பார்ப்போம்.

மேலும் தண்டி யலங்காரத்தின்கண் கண்ட மேற்கோள் செய்யுட்களில் அடியிற்கண்டபடி அநபாயன் என்ற பெயர்கள் காணக்கிடக்கின்றன—.

1. பொன்னே அநபாயன் பொன்னெடுந்தோள் ப. 1.
2. அன்னைபோ லெவ்வுயிரும் தாங்கும் அநபாயா ப. 24
3. தண் கவிகையா லுலகந்தாங்கு மநபாயன் ப. 69
4. அடுத்திருந்த கீர்த்தி அநபாயா ப. 69
5. அன்னவனை ஆழி அநபாயனை ப. 79
6. இகல்மதமால் யானை அநபாயன் ப. 98
7. அண்ணல் அநபாயன் வாழி ப. 129
8.* கொங்கார் அலங்கல் அநபாயன் குளிர் பொழில்சூழ் கங்காபுர மாளிகை ப. 154

* மேலே 8-வது அடியில்கண்ட கங்காபுர மாளிகை என்பதைக் கொண்டு திரு. சோமசுந்தர தேசிகர் அதில் கூறிய ஊர் கங்கை கொண்ட சோழபுரமாக இருத்தல் வேண்டும் என்றும் அரசன் கங்கை கொண்ட சோழனாக இருத்தல் வேண்டும் என்றும் கூறுகிறார். ஊர்

1. அநபாயன். தஞ்சை ஜில்லா திருவாரூர் தியாகராஜ ஸ்வாமி ஆலயத்தில் உள்ள ஒரு கல்வெட்டு "பூமன்று பதுமம்" என்று ஆரம்பித்து இறுதியில் சில வடமொழி சுலோகங்களோடு முடிகின்றது. வடமொழி சுலோகங்கள் S. I. I. Vol. II 153 பக்கத்தில் நாகாத்திலும் S. I. I. Vol. IV ல் கிரந்தாக்ஷரத்திலும் பதித்திருக்கிறார்கள். அது வருமாறு.

**श्रीमत् ब्रह्मपुरीशवागधिपतिस्वामिमित्रश्वये**

ஸ்ரீமத்ப்ரஹ்மபுரீசவாகதிபதிஸ்வஸ்வாமிமித்ரஸ்சயே

**तेभ्योहेमसभाधिनाथ चरणन्यासोल्लसुन्मस्तकः**

தேப்யோஹேமசபாதிநாதசரணன்யாசொல்லசுன்மஸ்தக

**प्रदात् भूमि हिरणयकंसरजतानन्यान्धनान् सेक्तमान**

ப்ரதாத்பூமிஹிரண்யகம்சரஜதானன்யான்தனான்சோக்தமான

**श्रीयारूरधिपस्य मूलवस्तौ देवोनपायोननुपः**

ஸ்ரீயாருரதிபஸ்ய மூலவஸதெளதேவோனபாயோங்ருப.

இதன்படி, திருவாரூர் ஆலயத்தில் எழுந்தருளியுள்ள பிரமபுரீசர் (ஞானசம்பந்தர்) வாகதிபதி (அப்பர்) ஸ்வஸ்வாமி மித்ரர் (சுந்தரர்) இவர்களுக்கு நிலம், பொன், பித்தளை, வெள்ளி முதலியவை பொன்னம்பலம் போற்றும் அநபாய மன்னன் தந்தான். புலியூரில் பொன்னம்பலத்து நடேசர் பாதார விந்தத்தில் ஈயாக (மொய்க்கும்) அநபாயன்........என்று பொருள்படும். (தஞ்சை 908) பிறகு முழு கல்வெட்டையும் பார்த்த

---

கங்கை கொண்ட சோழபுரமாக இருப்பினும் அரசன் கங்கை கொண்ட சோழனாக இருக்க வேண்டும் என்ற நியதி இல்லை. அவ்வரசன் வழி வந்தோரும் ஆக இருக்கலாம்.

மேலும் தண்டி யலங்காரத்தில், அபயன், அகளங்கன் என்ற பெயர்களும் காண்கிறோம்.

1. அம்மாதர் புல்லும் அபயன் ப-93
2. நிச்ச நிறைவான் கலையான் அகளங்கன் ப-117
3. அமல வகல மகல லபய ப-142

மேலே பக்கம் காண்பித்த பதிப்பு யாழ்ப்பாணம் குமாரசாமி பிள்ளையவர்கள் பதிப்பு.

தில் அதில் குலோத்துங்கன் II வனுடைய மெய்க்கீர்த்தியாகிய 'பூமன்றுபதுமம்' என்றிருக்கக் கண்டதில் அநபாயன் என்ற பட்டம் குலோத்துங்கன் II வனுடையதென்பது ஊகிக்கப்பட்டது (தஞ்சை 911, 913 p. 106) 'பூமன்றுபதுமம்' என்ற ஆரம்பப்பதங்கள் குலோத்துங்கன் II வனுடையதென்று திருமாலம் (109-10) சாசனத்தால் தெரிகின்றது.

2. அநபாய மூவேந்த வேளான் என்பவன் குலோத்துங்கன் காலத்தில் திருமந்திர ஓலை என்னும் உத்தியோகம் வகித்திருந்தான் என்று திருவானக்கோயில் (செ. 582, 578) களத்தூர் (செங். 44) சாசனங்களால் தெரிய வருகிறது. இதைப் பற்றி முன்னம் தொண்டைமான் சங்கதியைக் குறிக்கும்போது எழுதி யிருக்கிறேன். இந்த உத்தியோகஸ்தன் பெயரினலேயே இவன் அக்காலத்து அரசன் பெயரைத்தழுவி யுள்ளான் என ஊகிக்க முடியும். மேலும் இவன் காலத்தில் குலோத்துங்கன் திருநீற்றுச் சோழநல்லூர், அநபாய நல்லூர், திருத்தொண்டத்தொகை நல்லூர் என்ற ஊர்கள் ஏற்பட்டதைக் கவனித்தால் அநபாயன் திருநீற்றுச் சோழன் என்பவை அரசன் பட்டங்களாக இருக்கக்கூடும் எனலாம்.

3. அநபாய காடவராயன் என்ற மோகன் ஆளப்பிறந்தான் என்பான் இராஜராஜன் III-3-ம் ஆண்டில் இருந்தான் எனக் காண்கிறோம் (தென்ஆ. 541)

4. அநபாய முத்திரையன். விஜயாலய முத்திரையன் மகனை இவன் இராஜராஜன் III காலத்தில் இருந்தான் எனக் காண்கிறோம் (திருச்சி 544). இவ்விரண்டு பெயர்களினலும் பின் வந்த அரசர் காலத்திலும் இப்பெயர் மக்கள் கொண்டார்கள் எனத் தெரிகிறது.

5. அநபாய நல்லூர் : இப்பெயர் கொண்ட முன் சாசனங்கள் உண்டு (செங். 578,-271-15 பிரமதேசம்) 1916-S P. p. 120, 157-18 திருவையாறு.

6. அநபாயன் சேலூர் (தஞ் 858).

7. அநபாயபுரம் (தஞ். 597) இம்மூன்று பெயர்களும் சோழன் பெயரால் கட்டப்பெற்றவை.

. 8. திருநீற்றுச் சோழன்: (செங். 582) இது இவ்வரசன் கொண்ட ஒரு பட்டமாகும் (1912 E. P. p. 67) மேலும் 196-1901 என்ற கல்வெட்டு பூமன்றுபதுமம் என்று ஆரம்பித்து அரசனை திருநீற்றுச் சோழன் என்று குறிக்கிறது. இதனாலே இவனுடைய சிவபக்தியின் திறமை விளங்குகிறது. ஆகவே சேக்கிழார் சுவாமிகளால் உபதேசிக்கப் பெற்றவன் என்று ஊகிக்கலாம்.

9. தில்லையில் பேரம்பலம் பொன் வேய்ந்தான். திருப்புறம்பியம் 350-27. இக்கல்வெட்டில் பேரம்பலம் பொன் வேய்ந்த குலோத்துங்கன் என்று கண்டிருக்கிறது. தில்லையில் பொன் வேய்ந்த திருப்பணியை குலோத்துங்கன் I, அவன் மகன் விக்கிரமன் இவ்விருவரும் செய்ததாக கூறுவார்கள். விக்கிரமன் செய்தது 160—94-ல் காண்கிறோம். குலோத்துங்கச் சோழனுலாவில் குலோத்துங்கன் II பொன் வேய்ந்ததாகவும் பெரிய புராணத்தில் அநபாயன் செய்ததாகவும் கண்டிருக்கிறது. குலோத்துங்கனே அநபாயனானால் இரண்டும் பொருந்திவிடும். மேலும் இந்த கல்வெட்டினால் அண்டாத்துக்கூற்றம் விக்கிரம சோழ வளநாட்டில் இருப்பதாகக் கண்டிருக்கிறது. இவ்வளநாட்டின் பெயர் விக்கிரமனுக்குப் பிந்திதான் வரக்கூடும். விக்கிரமனுக்குப் பிந்தி வந்த குலோத்துங்கன் இரண்டாவது குலோத்துங்கனே. ஆகவே பொன் வேய்ந்தான் இரண்டாவது குலோத்துங்கன் எனலாம் (1927 EP. p 81).

மேலும் மேற்சொன்ன திருப்புறம்பயச் சாசனத்தில் குலோத்துங்கன் II பேரம்பலம் பொன் வேய்ந்ததாகக் கண்டிருக்கிறது. குலோத்துங்கன் I-ம், விக்கிரமனும் பேரம்பலம் பொன் வேய்ந்ததாகத் தெரியவில்லை. அவர்கள் சிற்றம்பலம் பொன் வேய்ந்தவர்கள். சிதம்பரத்தில் சிற்றம்பலம் என்பது நடராசர் சந்நிதி ஆகும். பேரம்பலம் என்றது அதற்கு வெளியில் கிழக்குப் புறத்தில் உள்ள வேறு ஆலயம். குலோத்துங்கன் I-ம், விக்கிரமனும் திருச்சிற்றம்பலத்தைப் பொன் மயமாக்கிய பிறகு குலோத்துங்கன் II அதை வேறொன்றும் செய்ய முடியாமல் பொன் வேய்ந்திராமல் நின்ற பேரம்பலத்தை பொன்

மயமாக்கியதையே மேல் சொன்ன கல்வெட்டில் குறிக்கப்பெற்றிருக்கிறது. இதனைத்தான் சேக்கிழாரும் தம் பெரிய புராணத்தில் "சேயவன் திருப்பேரம்பலம் செய்ய தூய பொன்னணி சோழன் நீடூழிபார் ஆயசீர் அநபாயன்" என்று கூறியிருக்கின்றார். குலோத்துங்கன் II தம் முன்னோர்கள் செய்ததை நோக்கி அன்பு மிகுதியால் வெளி இடத்தைப் பொன்னாக்கியதுமன்றி திருவீதிகளையும் திருவெல்லையையும் பொன்னாக்கின திருப்பணியைச் செய்தான். இதனைச் சேக்கிழார்.

"தில்லைத் திருவெல்லை பொன்னின் மயமாக்கிய வளவர் போரேறு"

என்றும்,

"மன்று திருத்தில்லை நகர்மணி வீதிப்பணி விளக்கும் சென்னி
நீடநபாயன்"

என்றும் அவன் செய்த மூன்றுவித திருப்பணிகளையும் தெரிவிக்கின்றார்.

இனி சிற்றம்பலத்திற்கும் பேரம்பலத்திற்கும் உள்ள வேறுபாட்டைக் கவனியாத திரு. சோமசுந்தர தேசிகர் தம் நூலில் இராஜேந்திர சோழன் பொன்னம்பலம் வேய்ந்தவன் என்று கொண்டு அவனை அநபாயன் என்றும் சேக்கிழார் காலத்தவன் என்றும் கொண்டார். சேக்கிழார் இந்த செய்கைகளில் காட்டிய நுட்பத்தை அவர் எடுத்தாளவில்லை. சேக்கிழாருக்கு உத்தம சோழப்பல்லவராயன் என்றிருத்தலைக் கொண்டு இராஜேந்திரனுக்கு உத்தம சோழன் என்ற பெயரிருத்தலாலே அவன் காலத்தில் இவர் இருந்திருக்க வேண்டும் என்கிறார். சோழர்கள் கொடுத்த பலவிதப் பட்டங்களைக் கவனிக்கும் காலத்தில் மன்னர்கள் தாம் வைத்துக்கொண்ட பெயர்களை மாத்திரம் தம் அமைச்சர்களுக்குக் கொடுத்ததாகத் தெரியவில்லை. தம் முன்னோர்கள் வைத்துக்கொண்ட பெயர்களையும் பட்டங்களாகக் கொடுத்து வந்ததாகத் தெரிகிறது. இதனாலே குலோத்துங்கன் II தன்முன்னோன் பெயரான உத்தமசோழன் என்ற பட்டத்தைக் கொடுத்திருக்கலாம். மேலும் அநபாயன் சீவகசிந்தாமணியை காவிய ரசத்திற்காகப் படித்தான் என்று சொல்லப்பட்டிருக்கிறதே ஒழிய ஜைன மதத்தை ஆதரித்தான் என்று சொல்லப்படவில்லை. அந்த காரணத்தைக் கொண்டு தேசிகர் அவன் இராஜேந்திரனாக இருக்கலாம் என்று ஊகித்ததும் பொருத்தமுடையதாகத் தோன்றவில்லை. இந்தக் காரணங்களினாலே சேக்கிழார் குலோத்துங்கன் II காலத்தில் வாழ்ந்திருத்தல் பெரும்பான்மையாக நிரூபிக்கப் பெறுகிறது என்று நாம் கொள்ள வேண்டும்.

### vi. சுவாமிகளது ஊர்

சுவாமிகள் அவதரித்த ஊர் பல்லாவரத்துக்கடுத்த 6 மைல் தூரம் மேற்கே உள்ள குன்றத்தூர். இது இப்பேர் கொண்ட நாட்டின் தலைமை நகராக இருந்த ஒரு பழமையான ஊர். இங்கே முருகக் கடவுள் எழுந்தருளியிருக்கும் ஒரு சிறு குன்று உண்டு. சேக்கிழார் சுவாமிகள் வீடு இருந்த இடத்தில் அவரது ஆலயமும் தோட்டமும் அமைந்தது என்பர். அவர் நிர்மாணித்த திருநாகேசுரம் இன்னமும் இருக்கின்றது. தம் சொந்த நிலங்களையே அதற்கு முற்றூட்டாக விட்டனர் என்பர். குன்றின் அடிவாரத்தில் பாலருவாயர் குளம் உண்டு. அதன் கரையில் ஒரு பழைய சிவாலயத்தில் அரச கோலத்துடன் ஒரு ஆண் உரு பத்தினியோடு நிற்கிறது. இதனை சேக்கிழாரும் அவரது பத்தினியாரும் என்பர் சிலர். ஆனால் ஊரார் இவ்வுருவங்களை அவ்வாலயத்திற்கு உபயம் புரிந்த சந்திரகிரி அரசர் கிருஷ்ணராயரும் அவர் மனைவியும் என்று சொல்லுகின்றனர். இச்சின்னங்களைத் தவிர இவ்வூரைச் சேக்கிழாருடன் சம்பந்தப்படுத்தும் ஆதாரங்கள் இல்லை. காரணங்களும் கூற முடியவில்லை.

அரசாங்கத்தார் பரிசோதித்து வெளியிட்டதில் இவ்வூரில் ஆறு கல்வெட்டுகள் மாத்திரம் கிடைத்தன. குலோத்துங்கன் III (1178-1216) 24-ம் ஆண்டு நாதநநதேசுவரர் ஆலயத்துச் சாசனத்தில் மனமை திருவகத்தீசுவர முடையார்க்கு நந்தாவிளக்கிற்காக 3 பசுக்களை தானம்செய்தது கண்டிருக்கிறது. குலோத்துங்கர் 6-ம் ஆண்டு ஈசுவரன் கோயில் சாசனத்தில் இருவர் வேட்டை ஆடப்போய் ஒருவர் ஒரு மிருகத்தின் மேல் எய்த அம்பு மற்றவன்மீது பட்டு அவன் இறக்க அந்த குற்றத்திற்கு பரிகாரம் செய்ததைக் குறிக்கிறது. அக்காலத்து கிரிமினல் விவகாரம் இதனால் விவரமாகத் தெரிகிறது. மூன்று சுந்தர பாண்டியன் காலத்துக் கல்வெட்டுகள் இருக்கின்றன. அவற்றில் ஒன்றில் உத்திரமேரூர் பஞ்சாயத்தில் (நியாயத்தார்) ஒரு பெண்மணி அங்கத்தினளாக இருந்ததைக் குறிக்கின்றது. இது ஒரு வியக்கத்தக்க விஷயம். அக்காலத்திலேயே பெண்கள் சுதந்திரம் முற்பட்டிருந்தது ஒரு சிறந்த அறிகுறியாகும். பெருமாள் கோவில் சாசனம் ஒன்று விஜயநகர அரசன் ஸ்ரீரங்கராயனுடையது. இக்கல்வெட்டுகளைக் கொண்டு சேக்கிழார் சரிதம் ஒன்றும் புலப்படுவதில்லை.

---

# சாந்திரமான உண்மை விளக்கம்

சந்திரன் சூரியனைப் பிரிந்து கஉ பாகை சென்றால் ஒரு சாந்திர தினமும், உச பாகை சென்றால் இரண்டு சாந்திர தினமும் இவ்வாறே பன்னிரண்டு பன்னிரண்டு பாகைகளுக்கு ஒவ்வொரு தினமாக க௱அ௰ பாகை சென்றால் கரு சாந்திர தினமும், பூரணை முடிவும் ௩௱௬௰ பாகை சென்றால் ௩௰ சாந்திர தினமும் அமாவாசை முடிவும் ஒரு சாந்திர மாதமுமாகும். இங்ஙனமாகும் சாந்திர மாதங்களின் தினம் ௩௰-க்கும் சுக்கிலப் பக்கப் (வளர்பிறை) பிரதமை முதல் பூரணை முடிவாயுள்ள கரு திதிகளாகவும், கிருஷ்ண பக்கப் (தேய்பிறை) பிரதமை முதல் அமாவாசை யீறுயுள்ள கரு திதிகளாகவும் பெயர் வைத்தும், அவற்றுள் சுக்கிலப்பிரதமை மாதாரம்பமும், அமாவாசை மாதமுடிவுமாகத் தென்னாட்டுச் சாந்திரமானிகளும், கிருஷ்ண பக்கப் பிரதமை மாதாரம்பமும் பூரணை மாதமுடிவுமாக வடநாட்டுச் சாந்திரமானிகளும், அவரவர் நூல்களில் எழுதி வழங்கி வருகிறதோடு பூரணை சேர்ந்துள்ள நட்சத்திரப்பெயர் மாதப்பெயர் போல் விதி யேற்படுத்தி, அங்ஙனம் ஏற்படுத்தப்பட்டுள்ள மாதங்கள் கஉ-க்கும் சைத்திர முதல் பாற்குனம் யீறான பெயர்கள் வைத்தும் வழங்கி வருகின்றனர். இங்ஙனம் வழங்கி வருகிறதில் முதலில் பிரதமை முதலிய திதிகளும் அப்பால் சைத்திர முதலிய மாதங்களும் சாந்திரமானமாயினவாறு காண்க.

ஆலயங்களிலும் சௌரமானிகளும் சாந்திரமானத்தில் யாதொரு கன்மங்களும் இயற்றவொண்ணாதென வற்புறுத்திக் கூறியுள்ள ஆகமங்கள், சாந்திரமானத்தில் முதன்மைபெற்றுள்ள திதிகளில் எல்லாக் கன்மங்களும் இயற்றுமாறு கூறுகின்றன. இதனாலே ஆகமங்கட்கு சைத்திர முதலிய மாதங்கள் மட்டுமே சாந்திரமானமெனப் பட்டதுபோலும்.

சாந்திர தினம் சாந்திர மாதம் என்பவைகளில் மாதத்தை மட்டும் சாந்திரமானமென விலக்கி திதியைச் சாந்திரமானம் அன்றெனத் தழுவிக்கொண்டுள்ள ஆகமம் கூறுகிறபடி வடமொழி தென்மொழி நூல்களும் கூறுகின்றன. பல பண்டிதர்களும் அவைகளை யொப்பி எழுதியிருக்கின்றனர்; எழுதுகின்றனர். ஆகமம் கடவுள் வாக்கென்றிருத்தலால் அக்கடவுள் முன்பின் முரணாகவும் உண்மைக்கு மாறாகவும் கூறுவரோ? அவர் முற்றறிவுடையோராகலின் அவ்வாறு கூறார். திதிகளோ சாந்திரமானத்தில் முதன்மையென்பதை மும்மூர்த்திகளாலும் மாற்ற இயலாது.

திதி, வாரம், யோகம், கரணம், நட்சத்திரம் என்பவைகளுக்கு முறையே க, அ, ௩உ, ௬௪, அ௰ குணங்கள் உள்ளதென

வடமொழி தென்மொழி சோதிட நூல்கள் கூறுகின்றதினாலும் அவ்வாறே அனுபவ ஆராய்ச்சியில் தேர்ச்சி பெறுகின்றதினாலும் திதிகள் மிகவும் குறைவான ஒரு குணமுள்ளவையென விளங்குகின்றதினாலே அவைகளில் கடவுட்புண்ணிய கன்மங்கள் இயற்றும்படி கடவுள் கூறார் என்பது திண்ணம்.

ஆரியருக்கு திதியும் தமிழருக்கு நட்சத்திரமும் உரியதென மொழிநூல் கூறும்; இனியேனும் நந்தமிழ்மக்கள் சௌரசாந்திரமான வேறுபாடுகளையும் முறையே உயர்வு தாழ்வுகளையும் நன்கு ஆராய்ந்துணர்ந்து சாந்திரதினமான பிரதமை முதலிய திதிகளையும் சாந்திரமாதமான சைத்திர முதலிய மாதங்களையும் சிறிதளவேனும் மறந்தும் தழுவாது விடுத்து சௌரமாதமான சித்திரை முதலிய மாதங்களிலும் அசுவதி முதலிய நட்சத்திரங்களிலும் எல்லாக் கன்மங்களும் நடத்திவரவேண்டுகிறேன்.

---

# காழித் திருமுலைப்பால் விழா

காழிக்கோமான் ஞானசம்பந்த வள்ளல் ஞானப்பாலுண்ட வைபவமாகிய திருமுலைப்பால் விழா இவ்வாண்டு பங்குனித் திங்கள் இறுதி நாளில் மிகவுஞ் சிறப்பாக நடந்தேறியது. தருமபுரம் மடாதிபதியாகிய ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக சுவாமிகள் அவர்கள் நேரே எழுந்தருளி யிருந்து விழாவைச் சிறப்பாக நடைபெறச் செய்தது போற்றத் தகுந்ததாகும். காழிப் பிள்ளையார் பாலுண்டு காட்சி பெற்றபின் ஸ்ரீலஸ்ரீ மகா சந்நிதானம் அவர்கள் தாங்கள் அச்சிடுவிக்கும் "சிவபோக சாரம்" என்னும் நூலின் சில பிரதிகளை ஆண்டுக் குழுமியிருந்த திருவாளர் கி. சிதம்பரநாத முதலியாரவர்கள், திருவாளர். தி. திருவேங்கிடம் பிள்ளையவர்கள் முதலிய பல பெரியாருக்கு அளித்தார்கள். பிறகு காழியிற் சிறந்த தமிழ்ப் பண்டிதராக விளங்கும் திரு. ப. அ. முத்துத் தாண்டவராயப் பிள்ளை அவர்கட்கு வித்வத் சிகாமணி என்ற பட்டமும், அவருடைய புதல்வரான திரு. ப. மு. சோமசுந்தரம் பிள்ளை M.A.L.T. அவர்கட்கும், திரு. கி. சிதம்பரநாத முதலியாரவர்கள் இளவலான திரு. ச. சதாசிவ முதலியாரவர்கட்கும், சென்னை போஸ்ட் மாஸ்டர் ஜெனரலாபீஸில் வேலைப் பார்த்து வரும் காழி. சிவ. கண்ணுசாமி B. A. அவர்களுக்கும் வித்வான் என்ற பட்டமும் மகா சந்நிதானத்தால் தருமபுர ஆதினத்தின் சார்பாக அளிக்கப்பட்டன. பட்டம் வழங்கியதற் கறிகுறியாகிய விலை யுயர்ந்த "சாதரா"க்களும் வழங்கப்பட்டன.

---



திருவாலங்காட்டுத் திருக்கோயில்